# பதினொரு மகாவிரதங்கள்



மகாத்மா காந்தி

காந்திய இலக்கியச் சங்கம்
மதுரை - 625 020.

# பதினொரு
# மகாவிரதங்கள்

## மகாத்மா காந்தி

காந்திய இலக்கியச் சங்கம்
மதுரை - 625 020.
0452 – 2533957

நூலின் பெயர் : **பதினொரு மகாவிரதங்கள்**

ஆசிரியர் : **மகாத்மா காந்தி**

வெளியிடுவோர் : **காந்திய இலக்கியச் சங்கம்**

அச்சிட்டோர் : **மாடர்ன் ஆப்செட் பிரிண்டர்ஸ்**
**சிவகாசி-626 123.**

பதிப்பு : **7ஆம் பதிப்பு - ஜனவரி** 2020
பிரதிகள் : **2000**

விலை : **20.00**



Name of the Book : **Pathinoru Mahavirathangal**

Author : mahatma Gandhi

Publishers : Gandhian Literature Society,
Madurai - 625 020

Printed by : Modern Offset Printers,
Sivakasi – 626 123.

Edition : 7th Edition – January 2020

Copies : 2000

**Price** : **Rs. 20.00**

# ஆசிரம நியமங்கள்

## 1. சத்தியம்

நான் முதல் முதலில் சத்தியத்தைப் பற்றிக் கூறப் போகிறேன். ஏனெனில் சத்தியாக்ரஹ ஆசிரமம் என்பது அதைப் போதிப்பதற்கும் கடைப்பிடிப்பதற்குமே ஏற்பட்டது.

"சத்தியம்" (உண்மை) என்னும் வார்த்தை "சத்" என்பதிலிருந்து வந்தது. 'சத்' என்னும் பதத்திற்கு 'இருத்தல்' என்பது பொருள். எனவே சத்தியத்தைத் தவிர உண்மையில் வேறொன்றும் இல்லை என்பது புலப்படும். அதனால் தான் "சத்" அல்லது உண்மை என்பது கடவுளின் முக்கியமான பெயராக விளங்குகின்றது. கடவுள் சத்தியம் என்பதைவிட சத்தியமே கடவுள் என்பது தான் சரியானது. ஆனால் நம்மை ஆள்பவர் அல்லது தலைவர் என்று யாரேனுமில்லாதிருத்தல் இயலாது. ஆதலின் ராஜாதி ராஜன், சர்வவல்லபன் என்னும் புனைப்பெயர்கள் கடவுளுக்கு இருந்தே தீரும். ஆராய்ந்து பார்ப்பின், "சத்" அல்லது சத்தியம் என்பதுதான் கடவுளுக்குத் தகுந்த பெயர்; அவரது முழு மகிமையையும் அப்பெயர் விளக்குகின்றது.

சத்தியமிருக்கும் இடத்தில் களங்கமற்ற அறிவும் இருக்கிறது. சத்தியமில்லாதவிடத்து சுத்த ஞானம் கிடையாது. அதனால்தான் "சித்" அல்லது "ஞானம்" என்பது கடவுளின் பெயருடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. உண்மை அறிவுள்ள இடத்தில் 'ஆனந்தம்' என்பது உண்டு. துக்கத்திற்கு அங்கு இடமில்லை. சத்தியம் எப்பொழுதும் உள்ளது. அவ்வாறே அதனின்றும் உண்டான ஆனந்தமும் எப்பொழுதும் நிலைத்திருப்பது. அதனால் தான் கடவுள் "சத்-சித்-ஆனந்தம்" என அழைக்கப்படுகிறார். உண்மை, அறிவு, ஆனந்தம் இம்மூன்றின் வடிவமே ஆண்டவன்.

சத்திய உபாஸகனாக இருப்பதே மனித வாழ்வின் முக்கிய நோக்கம். சத்தியத்தைச் சுற்றியே மனிதரின் செயல்கள் நடைபெற வேண்டும். மனித வாழ்வுக்கு மூச்சுப்போன்றது 'சத்தியம்'. வாழ்வென்னும் யாத்திரையில் இந்த எல்லைக்கல்லைத் தாண்டி விட்டால் இதர நல்ல தன்மைகளும், சரியான செயல்களும் தானாகவே ஓடிவரும். ஆனால் சத்திய நோக்கமில்லாது போய் விட்டால்

வாழ்வின் தத்துவங்கள் எதையும் கடைப்பிடிக்க முடியாமலே போய்விடும்.

பொதுவாக, உண்மை பேசுவது தான் சத்திய தர்மம் என்று அநேகர் நினைக்கின்றனர். ஆனால் ஆஸ்ரமத்தில், நாங்கள் 'சத்தியம்' அல்லது உண்மை என்பதற்கு இன்னும் விரிவான அர்த்தம் கொடுக்கிறோம். மனதிலும் பேச்சிலும் செய்கையிலும் உண்மையிருக்க வேண்டும். இவ்வுண்மையை நன்றாக அறிந்தவருக்குத் தெரிய வேண்டியது வேறொன்றுமில்லை. ஏனெனில் எல்லா அறிவும் அதனுள்ளேயே ஐக்கியமாய் இருக்கின்றது. உண்மை அறிவு இல்லையேல் மனிதருக்கு மனவமைதியும் கிடையாது. சத்தியம் எது என்பதைப் பிழையின்றி அறிந்து கொள்வதற்கான இவ்வழியை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது, எது செய்யத் தகுந்தது, எது பார்க்கத் தகுந்தது, எது படிக்கத் தகுந்தது என்பது உடனுக்குடன் புலப்படும்.

சத்தியம் என்பது ஒரு 'ஸ்பர்சவேதி'யைப் போன்றது. அதாவது தொட்டதெல்லாம் பொன்னாக்கும் இயல்புடைய கல்லைப் போன்றது. காமதேனுவைப் போன்றும் அது இருக்கிறது. இதை எப்படி அறிவது? பயிற்சியினாலும் வாழ்க்கையில் பிற பொருள்களின் மீதுள்ள வைராக்கியத் தினாலும், உண்மை நிலையை அடைய வேண்டுமென்ற சஞ்சலமற்ற தியானத்தினாலும் சத்தியத்தை அடையலாம் என்று பகவத் கீதை கூறுகிறது. ஆனால் அப்படிச் செய்யப்படும் தியானத்தில் ஒருவருக்கு உண்மையெனத் தோன்றுவது மற்றவர்களுக்குப் பொய்யெனத் தோன்றலாம். உண்மையைத் தேடித் திரிபவருக்கு அதைப் பற்றிய கவலை வேண்டியதில்லை. எவர் உண்மையாகப் பாடுபடுகின்றாரோ அவருக்கு வெளிச்சம் தோன்றியே தீரும். 'சத்தியம்' என்ற மரத்தின் இலைகளைப் போன்று இதர நற்குணங்களும் இருக்கின்றன. கடவுள் பலவித மனிதர்கள் முன்பு பலவித உருவங்களோடு தோன்றுகின்றாரன்றோ! அப்படித் தோன்றினாலும் அவர் ஒருவர் தானே! எனவே கடவுள் தான் சத்தியம். சத்தியம்தான் கடவுள். ஆகவே அவரவருக்குச் சரியெனத் தோன்றும் சத்தியமார்க்கத்தை அவரவர் பின்பற்றுவதில் யாதொரு தவறுமில்லை. ஏதாவது

நடுவில் தவறு ஏற்பட்டாலும் சத்திய உபாசகர் தானாகவே திருத்திக் கொள்வார். சத்திய சோதனை என்பது ஒரு பெரிய தவமாகும். சத்திய உபாஸ்கர் துன்பங்களை ஏற்றுக்கொள்ள நேரிடும். ஒருவேளை உயிர்த் தியாகமும் செய்ய நேரிடலாம். துளியளவு சுயநலத்திற்குக் கூட சத்திய வாழ்வில் இடமில்லை. அப்படித் தன்னை மறந்து உண்மையைத் தேடித் திரியும்பொழுது வேறு வழியிற் போகவும் முடியாது. ஒரு இடறல் ஏற்பட்டுத் தவறு செய்த உடனே, சரியான வழிக்குப் பக்தர் திரும்பிவிடுகின்றார். உண்மையைக் கடைப்பிடித்தல்தான் தூய பக்தியாகும். அதுதான் கடவுளிடம் சேர்ப்பிக்கும் வழி. அதில் கோழைத்தனம் என்பது ஏது? தோல்வி தான் ஏது? மரணம் என்பது பேரின்ப வீட்டின் வாயில் என்று தெரிவிப்பதும் அதுதான்.

ஹரிச்சந்திரன், பிரகலாதன், இராமர், இமாம் ஹசான், ஹீசேன் இன்னும் இதர கிறிஸ்து மதப் பெரியார்கள், இவர்களின் வாழ்க்கைகள் இவ்விஷயத்தை நன்கு விளக்கிக் காட்டுகின்றன. நம்மோர் அனைவரும், இளைஞர்களும் முதியவரும், ஆண் பெண் அடங்கலும் சத்திய சேவை செய்வதே நோக்கமென்று இருப்பார்களாயின் எவ்வளவு அழகாயிருக்கும்! வேலை செய்யும்போதும், சாப்பிடும்போதும், குடிக்கும் போதும், விளையாடும் போதும், விழித்துக் கொண்டுள்ள எந்த நேரத்திலும் சத்தியமே தியானமாக இருப்போமானால் சுத்தமான கனவற்ற துயில் ஏற்படுமன்றோ! சத்திய வடிவமான கடவுள் எனக்கு விலைமதிக்க வொண்ணாத பொக்கிஷமாயிருக்கிறார். நம்மோர் அனைவருக்கும் அவர் அவ்வாறே இருப்பாராக!

## 2. அஹிம்சை அல்லது அன்பு

அஹிம்சை என்ற பொருள்பற்றிச் சொல்ல வரும்போது ஒரு விஷயம் எனது ஞாபகத்துக்கு வருகிறது. ஒரு நாள் நாங்கள் 'புத்தகங்கள்' மீது துணி உறைகளைப் போடுவது பற்றிச் சர்ச்சை செய்து கொண்டிருந்தோம். எங்கெங்கு எழுத்துக்களை ஒட்டுவதென்பது பற்றியும் பேச்சு வந்தது. இதைப் போன்ற பயனற்ற, மடத்தனமான வீண்பேச்சு வேறில்லை. காலை வேளையில், பிரார்த்தனை நடத்தும்

புனிதமான நேரத்தில் பதினைந்து நிமிஷங்கள் வீணாக்கி விட்டோமே என்று வருந்தியதோடு அந்த நஷ்டம் மூன்று பங்கு நஷ்டமாகி விட்டதாக எனக்குத் தோன்றிற்று. மூன்று பங்கு நஷ்டமென்று ஏன் சொல்கிறேனென்றால், சத்தியத்தைப் பற்றி ஆராயாது காலத்தை வீணாக்கியது ஒன்று. அஹிம்சையைப் பற்றி ஆராயும் நேரத்தை வீணாக்கியது இன்னொன்று. அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடித்தவர் பிறருடைய துக்கங்களை அறிந்து அவைகளைப் போக்குவதற்கான வழிகளை எப்போதும் தேடிக் கொண்டேயிருக்க வேண்டுமன்றோ! மூன்றாவது இந்தப் பேச்சு அதிகப் பிரசங்கித்தனம் கொஞ்சம் மூளையை உபயோகித்திருப்போமானால் இவ்வளவு நேரத்தை வீணாக்கியிருக்க மாட்டோம். பொதுஜன சேவையில் 15 நிமிஷத்தை வீணாக்கியது தவறுதான் அல்லவா? ஆனால் இறுதியில் கடவுள் எங்களுக்கு நல்ல புத்தி தந்தது பற்றி மகிழ்கின்றோம். நிற்க.

சத்திய நெறியைப் போன்றே அஹிம்ஸை மார்க்கமும் நேரானது தான்; ஆனால் மிகவும் ஒடுக்கமானது. அதாவது துன்பங்கள் நிறைந்தது. கூரிய ஒரு வாளின் முனைமீது நடந்து செல்வது எவ்வளவு கடினமானதோ அவ்வளவு கடினமானது அஹிம்ஸை மார்க்கத்தைக் கடைப்பிடித்-தொழுகுவதும். வித்தைகள் செய்வதில் கைதேர்ந்த ஒருவர் அதிகமான பழக்கத்தின் பேரில் ஒரு கயிற்றின் மீது நடக்கலாம். ஆனால் இந்தக் கயிற்றைக் காட்டிலும் சத்தியக் கயிறும், அஹிம்ஸைக் கயிறும், மிக, மிக மெல்லியவை. இவற்றின் மீது நடந்து செல்பவர் சிறிது அசிரத்தைக் காட்டினாலும், தவறிக் கீழே விழுந்துவிடுவார். விடாமல் முயற்சி செய்வதன் மூலமாகவே ஒருவர் சத்தியத்தையும் அஹிம்ஸையையும் உணர முடியும்.

ஆனால் அழியக் கூடிய இந்த உடலில் அடைபட்டுக் கிடக்கும் வரையிலும் களங்கமற்ற சத்தியத்தை நாம் உணர முடியாது. அதைப் பற்றி நாம் சிந்தித்துக் கொண்டு மட்டுமிருக்கலாம். சத்தியம் அழிவற்றது. சாசுவதமானது. இப்பேர்ப்பட்ட சத்தியத்தை அழியும் தன்மையுடைய இந்த உடலைக் கொண்டு நாம் நேருக்கு நேர் காணவியலாது.

ஆதலால் தான் இறுதியில் மனிதர் நம்பிக்கையையே துணைக்கருவியாகக் கொள்ள வேண்டியிருக்கிறது.

சத்தியத்தை நாடி அலைந்து பண்டைக் காலத்தவர் ஒருவர் கடைசியில் அவ்வழியாகத்தான் அஹிம்சையைக் கண்டு பிடித்தார். "எனக்குக் கஷ்டங்களை உண்டு பண்ணுகின்றார்களே, அவர்களை நான் சகித்துக் கொண்டிருக்கலாமா? அல்லது அவர்களை நான் அழித்து விடலாமா? என்ற கேள்வியே அவர் மனதைக் கலக்கி வந்தது. தனக்கு கஷ்டங்களை உண்டு பண்ணுகிறவர்களை அழிப்பவர் அதே இடத்தில், அதாவது அதே நிலையிலிருக்கிறார் என்பதையும், கஷ்டங்களைச் சகித்துக் கொண்டவர், முன்னணியில் தான் செல்வது மட்டுமின்றி, சில சமயங்களில் தனக்குக் கஷ்டம் உண்டு பண்ணியவர்களையும் புனித எல்லைக்கு அழைத்துச் செல்கிறார் என்பதையும் அந்தப் பெரியார் அறிந்து கொண்டார். அவர் நாடி அலையும் பொருளாகிய சத்தியம் என்பது மனிதருக்கு வெளியேயில்லையென்றும், மனிதர் மனத்திலேயே இருக்கிறது என்றும் அவருக்கு உதயமாயிற்று. ஆகவே ஒருவர் ஹிம்சையில் அதிகமாக இறங்க, இறங்க அதிகமாக சத்தியத்தினின்றும் விலகிச் செல்கின்றார். ஏனெனில் வெளிப்புறத்தில் ஏதோ எதிரி இருப்பதாகவும், அதை எதிர்த்துப் போர் புரிய வேண்டுமென்றும் எண்ணிச் சண்டையிடுபவர் தனக்குள்ளேயேயிருக்கும் எதிரியை வெட்டி வீழ்த்த முயலாது, அதனைப் புறக்கணித்து விடுகிறார்.

நம்மைத் துன்புறுத்துவதாலேயே நாம் திருடர்களைத் தண்டிக்கிறோம். அவர்களை நாம் தண்டித்தவுடன் அந்த நிமிஷத்துக்கு அவர்கள் நம்மை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறார்கள். ஆனால் உடனே அவர்கள் மற்றொருவர் வீட்டில் திருடப் பார்க்கிறார்கள். இந்த மற்றொருவர் என்பது யார்? அவர் நாமேயன்றி வேறொருவரல்ல. நாம் தான் அந்த வடிவத்திலிருக்கிறோம். ஆகவே நாம் திரும்பத் திரும்ப சங்கடச் சுழலில் அகப்பட்டுக் கொண்டேயிருக்கிறோம். திருடுவதுதான் தங்கள் கடமை எனத் திருடர்கள் எண்ணுகிறார்கள். ஆதலால் திருடர்களின் தொல்லை அதிகமாகிறது. இங்ஙனமாக, திருடர்களைத்

தண்டிப்பதைக் காட்டிலும் அவர்களால் ஏற்படும் தொல்லைகளைச் சகித்துக் கொள்வதே மேலானது என்பதை நாம் அறிகிறோம். இந்தப் பொறுமையே அவர்களுக்கு நல்லறிவு புகட்டினாலும் புகட்டலாம். திருடர்களின் கஷ்டங்களைச் சகித்துக் கொள்வதால், திருடர்களும் நாமும் வேறுபட்டவரல்லவென்பதையும், அவர்களும் நம்முடைய இரத்தத்துடன் பிறந்த சகோதரர்களும், சிநேகிதர்களும்தான் என்பதையும், ஆதலால் அவர்களைத் தண்டிக்கலாகாது என்பதையும் நாம் அறிந்து கொள்கிறோம். ஆனால் துன்பத்தைச் சகித்துக் கொண்டு மட்டுமிருந்தால் போதாது. அது கோழைத்தனத்தில் கொண்டு போய் விட்டாலும் விடலாம். ஆகவே அதற்குமேல் நமக்கொரு கடமை இருக்கிறதென்பதையும் நாம் உணர்கிறோம். திருடர்களை நமது பந்துக்கள் மாதிரி நாம் பாவிப்பதால், இந்தப் நெருக்கத்தை அவர்கள் உணரும்படி நாம் செய்யவேண்டும். ஆதலால் அவர்களை நமது பக்கத்துக்கு இழுத்துக்கொள்ள வழிகள் தேட நாம் சிரமப்பட்டு முயலவேண்டும். இதுதான் அஹிம்ஸை வழி அல்லது அஹிம்ஸா மார்க்கம் என்பது. இம்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர் எல்லையற்ற துன்பங்களை அனுபவிக்க வேண்டி நேரிடலாம்; எல்லையற்ற பொறுமையையும் அனுபவிக்கும்படி ஏற்படலாம். இந்த இரண்டிற்கும் தயாராயிருந்தும் நாம் அஹிம்சா மார்க்கத்தைக் கடைப்பிடித்து நிற்போமானால் முடிவில் திருடன் தனது திருட்டுத் தொழிலை விட்டொழிப்பது நிச்சயம். இப்படியாக படிப்படியாக உலகத்திலுள்ள யாவரையும் நண்பர்களாக ஆக்கிக் கொள்ளும் வழியை நாம் கற்றுக் கொள்கிறோம். கடவுளின்-சத்தியத்தின் பெருமையை உணர்கிறோம். துன்பம் ஒரு பக்கமிருந்த போதிலும் நமது மனச்சாந்தி அதிகமாகின்றது; நமக்கு அதிக தைரியம் உண்டாகின்றது: எக்காரியத்தையும் செய்யக்கூடிய ஒரு சக்தி பிறக்கின்றது; அழிவற்று இருப்பது எது, அழியத் தகுந்தது எது, இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன என்பதை-யெல்லாம் நாம் தெளிவாக அறிந்து கொள்கிறோம்: எது நமது கடமை, எது நமது கடமையல்ல என்பதையும் தெரிந்து கொள்கிறோம். நம்மிடமுள்ள பெருமையும்,

அகங்காரமும் மறைந்து விடுகின்றன; நம்மை நாம் பணிவு செய்து கொள்கிறோம். ஆடம்பரமின்றி, அடக்கமாக வாழத் தொடங்குவோம். உலகப் பற்றுகள் குறைந்து விடுகின்றன; நம் மனத்திலுள்ள பல தீய குணங்களும் நாளுக்கு நாள் சுருங்குகின்றன.

மேல் வாரியாக அஹிம்சைக்கு என்ன பொருள் கொள்ளப்படுகின்றதோ அதுதான் அதன் உண்மைப் பொருள் என எண்ணுவதற்கில்லை. உயிர்கொண்டு வாழும் எந்த உயிருக்கும் துன்பமிழைக்கக் கூடாது என்பது அஹிம்ஸா தர்மத்தின் ஒரு அம்சம்தான். ஆனால் அதுதான் அதன் குறைவுபட்ட அம்சமாகும். ஒரு ஆயுதத்தால் ஒருவர் மற்றொருவருக்கு இழைக்கும் துன்பம்தான் ஹிம்சை என நாம் கொள்ளலாகாது. பிறரைப்பற்றி மனதில் கெடுதலாக எண்ணுவதும், அதிக அவசரப்பட்டுக் காரியத்தைச் செய்வதும், பொய் பேசுதலும், மனதில் வெறுப்புக் கொள்ளுதலும், கெட்ட எண்ணங்களை மனதில் வளர்த்து வருவதும், அஹிம்ஸா தர்மத்தை நாசமாக்குவதாகும். நாம் தினந்தோறும் நம் வயிற்றுக்குச் சாப்பிடுகின்றோமே, அது கூட இல்லாமல் இந்த உலகத்திலே எத்தனையோ உயிர்கள் தவிக்கின்றன. நாம் ஓரிடத்தில் நிற்பதாலும் அல்லது உட்கார்ந்து இருப்பதாலும் கூட எத்தனையோ கோடிக்கணக்கான உயிர்களுக்கு துன்பம் ஏற்படுகின்றது. இந்நிலையில் நாம் என்ன செய்வது? நாம் உயிருடன் வாழ்வதே பிறருக்கு துன்பம் தருவதாகவிருக்கிறது என்பதற்காக நாம் நம் உயிரை மாய்த்துக் கொள்ளலாமா? இந்த பூத உடலுடன் ஆன்ம சக்தி நிலவும் வரையிலும் இந்த உடல் அழிந்தாலும், அதன் மேல் மற்றொரு உடல் தோன்றும் என்ற நம்பிக்கையை நாம் கொண்டிருந்தால் தற்கொலை வழி நிவர்த்தி மார்க்கமாகாது. உலக இச்சைகள், பற்றுதல்கள் முதலியவைகளினின்றும் நாம் விடுபடுவதுதான் சிறந்த மார்க்கம். இந்த பற்றுதல்களினின்றும் விடுபடுவதுதான் ஆண்டவனை சத்திய வடிவமாக உணர்வதாகும். அவசரப்பட்டால் இந்த உணர்வு உண்டாகி விடாது. ஏனெனில் இந்த உடல் நமக்குச் சொந்தமானதல்ல. அது இருக்கும் அளவும், நாம் அதன் தர்மகர்த்தாவாக இருந்து அதனைப் பாதுகாக்க வேண்டும். இங்ஙனமாக உடல் பற்றுதலினின்றும் சதைக்

கூட்டினின்றும் ஒரு நாள் விடுபடுவதை நாம் எதிர்பார்க்கலாம். இந்த சதைக் கூண்டுக்கு எவ்வளவு வலிமையுண்டு என்பதை அறிந்து கொண்டும், நமது நோக்கத்தையும் தெளிவாக வைத்துக் கொண்டும், நமது சக்திக்கு இயன்ற அளவு இடைவிடாது நாம் உழைத்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

மேற்கூறியவற்றிலிருந்து அஹிம்ஸையில்லாமல் சத்தியத்தை தேடிப் பிடிக்க முடியாதென்பது தெளிவாகும். மலரினின்று மணத்தை எங்ஙனம் பிரிக்க முடியாதோ அங்ஙனமே அஹிம்சையும், சத்தியமும் பிரிக்க முடியாதவை. சத்தியமும், அஹிம்சையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவை. நாணயத்தின் முன்பக்கம் எது, பின் பக்கம் எது என்று எப்படி நிர்ணயிக்க முடியும்? சத்தியத்தை அடைய அஹிம்ஸை சாதனமாகும். சத்தியம் என்னும் ஆலயத்தை அடைய விரும்புபவர் அஹிம்ஸை என்னும் பாதை வழியாகத்தான் நடந்து செல்ல வேண்டும். ஆகவே அஹிம்ஸைதான் நமது முதல் கடமை. நாம் சாதனத்தை செவ்வையாக வைத்துக் கொண்டால் முடிவை அடைந்து விடுவது சுலபமானது. இவ்விஷயத்தை நாம் உணர்ந்து கொண்டோமானால் வெற்றி கிட்டுவதில் ஐயமில்லை. எவ்வளவு துன்பத்தை நாம் அனுபவிக்க வேண்டியிருந்தாலும், எத்தகைய கஷ்டங்களுக்கு நாம் ஆளானாலும், சத்தியத்தைத் தரிசிக்க வேண்டுமென்ற நமது நாட்டத்தை நாம் கைவிடுதல் கூடாது; ஏனெனில் சத்தியமே நிலை பெற்றது; சத்தியமே அழியாதது; சத்தியமே தெய்வம்.

## 3. பிரம்மச்சர்யம்

நாம் கடைப்பிடித்தொழுக வேண்டியவற்றில் மூன்றாவது பிரம்மச்சர்யம். நாம் பின்பற்றி நடக்க வேண்டிய சகலமும் சத்தியத்தினின்றே பிறக்கின்றன; சத்தியத்தைக் காக்கவே அவை இருக்கின்றன. சத்தியத்தைப் பற்றிக் கொண்டு, சத்தியத்தையே வணங்குபவர், தன்னுடைய திறமைகளை வேறெந்தத் துறையிலேனும் செலவிடுவானாகில் சத்தியத்தைக் காலால் உதைத்துத் தள்ளியவராகின்றார். சத்தியத்தை அறிவதற்காகவே காலத்தையும், முயற்சியையும், ஊக்கத்தையும் செலவழிப்பவருக்குக் குழந்தைகளைப் பெற்று வளர்த்தல்,

வீடு வாசல்களை வைத்துக் கொண்டு குடும்பத்தை நடத்துதல், இவை போன்ற தன்நலம் மிகுந்த காரியங்களுக்கு அவகாசமே கிடையாது. சத்தியத்தை நாடுபவர் தன்நல சிந்தையற்றவராகயிருத்தல் வேண்டும். தன்நல உணர்ச்சிகளைத் திருப்தி செய்வதிலேயே ஈடுபட்டிருந்த எவரும் சத்தியத்தை உணர்ந்ததாக நாம் இதுவரை கேள்விப்பட்டதில்லை.

மேலும் அஹிம்ஸை நிலையினின்று நோக்குவோமானால், பரிசுத்தமின்றி அஹிம்ஸையை நிறைவேற்றி வைக்க முடியாதென்பதை நாம் கண்டு கொள்கிறோம். அஹிம்ஸை என்பதென்ன? உலகிலுள்ள ஜீவராசிகள் அனைத்தின் மீதும் அன்பு காட்டுவதே அஹிம்ஸையாகும். ஒரு மனிதர் ஒரு பெண் மீதும், ஒரு பெண் ஒரு மனிதர் மீதும் அன்பு செலுத்துவார்களாகில், அவர்கள் உலக முழுவதுக்கும் எவ்வாறு அன்பு காட்ட முடியும்? "கணவரும், மனைவியும்' என்பதுடன் அவர்கள் அன்பு நின்றுவிடுகின்றதே! மற்றவர்களைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லையே! உண்மையான மனைவி தன்னிடமுள்ள யாவற்றையும் தன் கணவருக்காக தியாகம் செய்யத் தயாராகயிருக்க வேண்டும்; இங்ஙனமே உண்மையான கணவரும் தன்னிடமுள்ள எல்லாவற்றையும் தன் மனைவிக்காகத் தியாகம் செய்யத் தயாராயிருக்க வேண்டும். ஆதலால் இந்நிலையில் அவர்களால் உலகம் முழுவதுக்கும் அன்பு காட்டுவதென்பதே முடியாது; எல்லா மனிதரையும் தங்கள் சுற்றத்தவர் போல் கருதவும் அவர்களால் இயலாது. ஏனெனில் தங்கள் அன்பைச் சுற்றி அவர்கள் ஒரு மதில் சுவரை எழுப்பிக் கொண்டு விட்டனர். "இதுவரையில் தான் நமது அன்பு அதற்குமேல் இல்லை' என்று அவர்கள் வரையறுத்துக் கொண்டு விட்டார்கள். அவர்களது குடும்பம் எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் உலக அன்பினின்றும் விலகிச் செல்கின்றனர். அதாவது அன்புக்கு எல்லை கட்டிக்கொண்டு விட்டனர். ஆகவே அஹிம்ஸைக்குக் கட்டுப்படுபவர் திருமணம் செய்து கொள்ள முடியாது. அத்து மீறிய சிற்றின்ப வாழ்க்கையிலும் ஈடுபட மாட்டார் என்பதை சொல்லவும் வேண்டுமா?

அப்படியாயின் ஏற்கனவே திருமணம் செய்து கொண்டு விட்டவர்களின் கதி என்ன? அவர்களால் சத்தியத்தை எப்பொழுதும் அறியவே முடியாதா? மனித குலத்துக்காக அவர்களால் எப்பொழுதும் தொண்டு செய்யவே முடியாதா? அவர்களுக்கும் ஒரு வழி இருக்கின்றது. திருமணம் செய்து கொண்டிருந்தும், அவர்கள் திருமணமாகாதவர்கள் போல் நடந்து கொள்ள வேண்டும். இந்தச் சந்துஷ்டியான நிலைமையின் இன்பத்தை அனுபவித்தவர்களுக்கு நான் சொல்லுவது நூதனமானதாகப்படாது. எனக்குத் தெரிந்து எத்தனையோ பேர்கள் இம்முறையை பரீசித்துப் பார்த்து பலனடைந்திருக்கின்றனர். ஒரு கணவர் தன் மனைவியைச் சகோதரியாகவும், ஒரு மனைவி தன் கணவரைச் சகோதர னெனவும் பாவிக்கத் தொடங்கி விட்டால், உலகத்துக்குச் சேவை செய்ய அவர்கள் தகுந்தவர்களாகின்றனர். உலகிலுள்ள பெண்கள் அனைவரையும் ஒருவர் தன்னுடைய சகோதரிகள் அல்லது தாயார்கள் அல்லது புதல்விகள் என்று எண்ணுவாரானால் அந்த எண்ணமே அவரை உயர்த்தி, அவர் கட்டுண்டு கிடந்த தளைகளை அறுத்தெறிகின்றது. இதனால் கணவரும், மனைவியும் எதையும் இழந்து விடவில்லை. இதனால் அவர்களுக்கும், குடும்பத்துக்கும் செல்வாக்கு அதிகமாகின்றது. காமம் என்னும் அசுத்தத்தைத் தாங்கியிருந்த அவர்களின் அன்பு அந்த அசுத்தத்தினின்றும் நீங்கி, பரிசுத்தப் படுகின்றது. தூய்மை பெற்ற இந்த அன்பு தினம் தினம் வளர்கின்றது. கடைசியில் எங்கும் நிறைந்த அன்பாகி விடுகின்றது. கணவரும், மனைவியும் பிரம்மச்சர்யத்தை கடைப்பிடிப்பதால் அவர்களிருவரும், ஒருவருக்கொருவர் சிறந்த முறையில் ஊழியம் புரிந்து கொள்ளலாம்: அவர்களிருவரும் சண்டையிட்டுக் கொள்தலும் குறைந்து விடும். கணவர், மனைவி இருவருக்குமுள்ள 'காதல் தன்நலம் மிகுந்ததாயும், ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் அடங்கியதாயுமிருந்தால் கணவருக்கும் மனைவிக்கும் சண்டைகளேற்பட அதிக இடமிருக்கின்றதல்லவா?

இந்த அடிப்படையான தத்துவங்களை நாம் நன்கு உணர்ந்து கொண்டு, மனதிலிருத்திக் கொண்டு விட்டோமானால், பிரம்மச்சர்ய விரதத்தை கடைப்-பிடிப்பதனால் உடலுக்கேற்படக்கூடிய பலன்களைப் பற்றிச்

சிந்திக்க வேண்டிய அவசியமுண்டாகின்றது. காம இன்பத்தில் நமது உயிர்சக்தி அனைத்தையும் வேண்டுமென்றே சிறிது சிறிதாக இழப்பது எவ்வளவு மடத்தனமானது? வஜ்ஜிர உடலையும், அற்புதமான மூளை சக்தியையும் வளர்த்துக் கொள்ளவே ஈசுவரன் நமக்கு உயிர் சக்தியை அளித்திருக்கின்றார். அப்படிப்பட்ட ஒரு பெரிய சக்தியை, உடல் சம்பந்தமான ஒரு ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளும் துறையில் நாம் வீணாக்குவோமானால் கடவுளின் ஆளுகைக்கு விரோதமாக நடந்தவர்களாவோம். உலகிலே பரவியுள்ள எண்ணிறந்த நோய்களுக்குக் காரணம் மனிதரிடமுள்ள இந்த உயிர்ச் சக்தி அனாவசியமாக அழிக்கப்படுவதுதான்.

'மனம், வாக்கு, காயம் மூன்றினாலும் பிரம்மச்சர்யம் அனுஷ்டிக்கப்பட வேண்டும். உடல் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள முயலும் ஒருவர், மனதில் கெட்ட எண்ணங்களை வளர்ப்பாராகில் அவரது முயற்சி வீணாவது திண்ணம்' எனக் கீதை கூறுகின்றது; இதை நாம் அனுபவத்திலும் கண்டிருக்கிறோம். மனதை வெளியே எந்தத் தீய எண்ணங்களிலும் அலைய விட்டுவிட்டு, உடல் உணர்ச்சிகளை மட்டும் அடக்குவது தீமையை விளைவிக்கும். மனம் அலையுமிடத்தே இப்பொழுதில்லா-விடினும், சிறிது காலம் கழிந்த பின்னராவது உடலும் அலைந்தே தீரவேண்டும். இச்சமயத்தில் நாம் ஒரு வேறுபாட்டை அறிந்து கொள்ள வேண்டும். தீய எண்ணங்களில் நாமே மனதை அலைய விடுவது ஒரு விஷயம். நாம் அடக்கியும், நமக்கு அடங்காமல் மனது தானாகவே மேற்படி எண்ணங்களை நாடுவது வேறு விஷயம். இந்தத் தீய நெறியில் நம்மை இழுத்துச் செல்ல முயலும் மனதுக்கு நாம் இடங்கொடுக்காமல், அதனுடன் ஒத்துழைக்க மறுத்து விடுவோமானால் இறுதியில் மனது தோல்வியுறும்; நாம் வெற்றி பெறுவோம். இது நிச்சயம். இவ்வாறாக உடலை நம்மால் கட்டுப்படுத்திவிட முடிகின்றது. ஆனால் மனதை கட்டுப்படுத்த முடியவில்லை. இதை நாம் நமது வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிஷமும் அனுபவத்தில் பார்க்கிறோம். ஆகவே நாம் உடனே உடலைக் கட்டுப்படுத்தி விட்டு, பின்னர் மனதை அடக்கிக்கொண்டு வருவதில் ஓயாமல் நமது முயற்சி

யாவற்றையும் செலுத்த வேண்டும். இதைவிட நாம் அதிகமும் செய்ய முடியாது; குறைவாகவும் செய்ய முடியாது. மனம் போனபடி நாம் அதற்கு இடங்கொடுத்தால் மனம் ஒரு வழியும், உடல்வேறு வழியுமாக நம்மை இழுக்கும். அப்பொழுது நாம் நம்முடைய கடமையைச் செய்யத் தவறிவிட்டவர்களாவோம். நம் மனத்திலெழும் ஒவ்வொரு கெட்ட எண்ணத்தையும் அணுகவொட்டாமல் நாம் எதிர்த்துக் கொண்டேயிருந்தால், உடலும் மனமும் ஒரே நிலையிலிருக்கும்.

பிரம்மச்சர்யத்தை கடைப்பிடிப்பது மிகவும் கஷ்டமானது. அசாத்தியமானது என்று கூடச் சொல்லப்படுகிறது. இந்த நம்பிக்கைக்குக் காரணமென்ன என்பதை அறிய முயலுகையில் பிரம்மச்சர்யம் என்பதை மிகவும் குறுகிய பொருளில் ஜனங்கள் அறிந்து கொண்டிருக்கின்றனர் என்பதை நாம் காண்கிறோம். நம்மிடமுள்ள மிருகத்தனமான காம ஆசையை அடக்கிவிடுவது தான் பிரம்மச்சர்யம் எனப் பலர் எண்ணிக்கிடக்கின்றனர். இது சரியானதல்ல. தவறு என்று நான் சொல்லுகிறேன். ஐம்புலன்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவியையும், உணர்ச்சியை ஊட்டுவதான உறுப்புக்கள் அனைத்தையும் அடக்குவதே பிரம்மச்சர்யம். ஒருவர் ஒரு உறுப்பை மட்டும் அடக்கிவிட்டு, மற்ற எல்லாவற்றையும் அதன் விருப்பப்படி செயல் புரிய விட்டுவிடுவாராகில் பிரம்மச்சர்யத்தை அனுஷ்டிக்கும் முயற்சியில் தோல்வியையே காண்பார். காதினால் காமமூட்டும் கதைகளைக் கேட்டுக்கொண்டும், கண்ணினால் கெட்ட காட்சிகளைக் கண்டு கொண்டும், நாவினால் உணர்ச்சியூட்டும் பண்டங்களைச் சுவைத்துக் கொண்டும் ஆனால் இதர புலன்களை மட்டும் அடக்கிவிட வேண்டுமென ஒருவர் முயற்சி செய்வாரானால் அது நெருப்பில் கையை வைத்துவிட்டு கைக்கு சூடேறாது தப்பித்துக் கொள்ள முயல்வது போலிருக்கிறது. ஒரு புலனை அடக்கக் கங்கணம் கட்டிக் கொண்டவர், மற்ற யாவற்றையும் அடக்கவும் கங்கணம் கட்டிக் கொள்ள வேண்டும். பிரம்மச்சர்யத்தின் பொருள் குறுகிய முறையில் அறிந்து கொள்ளப்படுவதாலேயே தீங்கேற்படுகின்றதென்று நான் எப்பொழுதும் உணர்ந்து வருகிறேன். எல்லாத் துறையிலும் ஏக காலத்தில் புலன்களையடக்கினால் வெற்றி

சுலபமாகக் கிடைத்தே தீரும். முக்கியமாக மனிதரின் நாக்குத்தான் அதிக பாவத்தைச் செய்கிறதென்பது எனது கருத்து. நாக்கை அடக்குபவர் எதையும் அடக்கி விடலாம்.

இறுதியாக நாம் பிரம்மச்சர்யத்தின் அடிப்படையான அர்த்தத்தை நினைவிலிருத்திக் கொள்வோம். பிரம்மம் அல்லது சத்தியத்தை அடையும் மார்க்கமே பிரம்மச்சர்யம். மேற்படி காரியத்தில் சித்திபெற நாம் நமது வாழ்க்கை முறையை ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். மேற்கூறிய இந்த அர்த்தத்திலிருந்தே எல்லாப் புலன்களையும் நாம் அடக்கி ஆளவேண்டுமென்ற அர்த்தம் உதிக்கின்றது. ஆண் பெண் சேர்க்கை சம்பந்தமாக மட்டும் பிரம்மச்சர்யத்துக்குப் பொருள் கூறப்படுவதை நாம் மறந்து விடுவோமா!

## 4. நாக்கை அடக்கல்

நாவடக்கம் என்பது பிரம்மச்சரியத்தைச் சார்ந்தது. எவரொருவர் தன்னுடைய நாக்கு ருசிகளை அடக்கிக் கொள்கிறாரோ அவரால் இந்திரிய கட்டுப்பாடு செய்ய முடியுமென்பதை நான் அனுபவத்தில் கண்டிருக்கின்றேன். நாக்கை அடக்க வேண்டுமென்ற உத்தம போதனை முன் காலத்திலிருந்தே கடைப்பிடிக்கப்பட்டு வந்திருக்கவில்லை. இதைச்செய்வது மகரிஷிகளுக்குக் கூட கடினமாயிருந்திருக்க வேண்டும். சத்தியாக்கிரக ஆசிரமத்தவர்களாகிய நாம் நாக்கை அடக்குவது ஆசிரம நியமங்களில் ஒன்றெனக் கருதி வருகின்றோம். ஆகவே அதைப்பற்றியும் தனியாக விவரிக்க வேண்டும்.

மருந்தைச் சாப்பிடுவது போலவே உணவை அருந்த வேண்டும். நாக்குக்கு நன்றாயிருக்கிறதா? இல்லையா என்று பாராது அது உடலுக்கு உகந்ததா என்பதை மட்டும் கருத வேண்டும். மருந்து சாப்பிடுவதில் அளவு குறைந்தால் அது பயன்படுவதில்லை; அதிகமாக உட்கொண்டாலோ உடல் நிலைமையை இன்னும் கெடுத்துவிடும். இந்த இரண்டும், ஆகார விஷயத்திலும் முற்றிலும் பொருந்துவன. சுவை நன்றாயிருக்கிறதென்று எதையும் உண்டுவிடலாகாது. எந்த நல்ல சுவையான பண்டத்தையும் அதிகமாகவும் உட்கொள்ளலாகாது.

நம்முடைய உடலையும் புலன்களையும் அடக்கி ஆளாமல் நம்மில் அநேகர் அவைகளுக்கு அடிமைகளாகி விடுகிறோம். உலகத்திலேயே ஆரோக்கியமான ஒரு மனிதனும் கிடையாதென ஒரு பெரிய வைத்தியர் என்னிடம் சொன்னார். அது முற்றிலும் உண்மை. எந்தச் சமயத்திலும் மனிதன் அளவு மீறி உண்டாலும் உடல் கெட்டுவிடுகின்றது. அதற்கு பட்டினி கிடப்பதுதான் சரியான மருந்து.

இந்தத் திட்டங்களையெல்லாம் பார்த்து ஒருவரும் நடுங்கி விட வேண்டாம். நம்மால் முடியாதது என்று ஒதுங்கி விடவும் வேண்டாம். நாம் ஏதாவது சபதம் செய்து கொள்ளும் போது அதை முற்றிலும் கடைப்பிடித்துவிட வேண்டுமென்று வீம்பு கூறுவதில்லை. ஆரம்பத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக நடவடிக்கையைச் சீர்திருத்திக் கொள்ள முயலுவோம். சொல்லாலும், மனத்தாலும், செயலாலும், கோரியதை அடையும் வழியை, சிறுகச் சிறுகத் தேடுவோம். கடைப்பிடிக்க முடியாத அளவுக்கு வரையறுத்துக் கொண்டு நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளலாகாது. ஒரு சிறந்த லட்சியத்தை நம்முடைய நன்மைக்காக வீணாக்குவது நம்மை நாமே கெடுத்துக் கொள்வதாகும். ஒரு லட்சியத்தை அறிவதும், அதை அடைவதற்காக அனுமானைப் போல ஆர்வத்துடன் முயற்சிப்பதும் தான் மனித வாழ்க்கையின் தத்துவமாகும். இதைத்தான் "புருஷார்த்தம்" என்கிறார்கள். மகா விரதங்களைக் கொஞ்சமாவது பிசகின்றி கடைப்பிடிப்பவருக்கு உலகில் ஒன்றுமே தேவையில்லை. அவர் தான் பகவான்' அவர்தான் "யோகி'. நம்மைப் போன்ற சாதாரண பக்தர்கள் மெதுவாகவும், ஆனால் விடாமுயற்சியோடும் உழைத்தால் கடைசியில் பகவத் பிரஸாதம் கிடைக்குமென்பதில் ஐயமில்லை.

இதை அறிந்து நாம் நமது வாழ்க்கையைத் தினம் தினம் சீர்திருத்திக் கொண்டிருக்க வேண்டும். நாம் ஒரு நாளில் 24 மணி நேரமும் நம்முடைய ஆகாரத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கலாகாது. ஆனால் எப்போதும் நாவையடக்கும் திறனோடிருக்க வேண்டும். அப்படி இருப்போமானால் எவ்வெப்போது நமது நாக்கு நீள்கிறதென்றும்

எவ்வெப்போது உடலுக்காக உண்கிறோமென்றும் நாம் அறிந்துணர்ந்து கொள்வோம். இதை அடைந்த பின்பு சுவையை அடக்க முயல வேண்டும். இந்த லட்சியத்தை அடைவதற்காக எல்லோருக்கும் பொதுவாக ஒரு பொதுச் சமையலறை இருப்பது நல்லது. அது இருந்தால் அன்றாடம் என்னென்ன சமைக்கச் சொல்வது என்ற கவலை நமக்கு இல்லாது போகின்றது. நமக்கு அவசியமாக வேண்டிய ஆகாரம் கிடைப்பதால் நாமும் மகிழ்ச்சியடைவோம். நம்முடைய லட்சியத்தை நிறைவேற்றி வைப்பவர்களாக, பொதுச் சமையலறைக்காரர்கள் இருக்கின்றனர். சேவைக்குச் சிறந்த கருவியாக நமது உடலை வைத்திருக்க எத்தகைய உணவுகள் அவசியமோ அவைகளையே அவர்கள் படைப்பார்கள். மிகத் தீவிரமான கடைப்பிடித்தலின்படி சமையலுக்கு நெருப்புக்கூட உபயோகிக்க வேண்டாம். சூரியன் என்ற பெரு நெருப்பில் வெந்த ஆகாரத்தையே மனிதர் உண்பது நலம். பழ வர்க்கங்களையே புசிப்பது சிறந்தது. பிரம்மச்சரியத்துக்கும் நாவடக்கலுக்கும் சம்பந்தம் இருப்பதையே நான் காட்ட விரும்பினேன். இந்த லட்சித்தை அடையச் சிறுகச் சிறுக நாம் பழகுவோமாக.

## 5. திருடாமை

இப்போது 'திருடாமை' என்ற விஷயத்தைப் பற்றி விவரிப்போம். இதுவும் சத்திய சோதனையின் ஒரு பகுதிதான். 'அன்பு' என்பது 'சத்தியம்' என்றே சொல்வாருண்டு. ஆனால் நான் சத்தியத்தினிடமே அதிகப் பற்றுக்கொண்டவன். எதையும் ஆராய்ந்தால் சத்தியமே மூல வேராக இருப்பது தெரியவரும். மேலான சத்தியத்திற்கு ஆதரவு ஏதும் தேவையில்லை. சத்தியத்தை அடைவதற்கு 'அன்பு' என்பது ஒரு வழியாகும். 'அன்பு' என்றால் 'அஹிம்சை' என்று அர்த்தம். அன்பு மதத்தைப் பின்பற்றுவது சுலபமான காரியமல்ல. ஆனால் சத்தியத்தின் ஒரு பாகத்தைக் கூட நம்மால் கண்டறிய முடியாது. அகிம்சா தர்மத்தை இம்மியும் தவறாமல் பின்பற்றுவது மனிதருக்கு எவ்வளவு கஷ்டமோ அவ்வளவு கஷ்டம் சத்தியத்தின் சொரூபத்தைப் பற்றி அறிந்துகொள்வதுமாகும். நிற்க,

திருடிக்கொண்டிருக்கும் இயல்புடையவரால் அதே சமயத்தில் சத்தியத்தைப் பற்றியோ, அன்பு மதத்தைப் பற்றியோ அறிந்து கொள்ளமுடியாது. ஆனால் நம்மில் ஒவ்வொருவரும் அறிந்தோ அறியாமலோ திருட்டுக் குற்றத்திற்கு ஆளாகிக் கொண்டேயிருக்கிறோம். பிறருடைய பொருள்களை அபகரிப்பவர் திருடராவது போல தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்பவரும் திருடர்தான். தன் குழந்தைகளுக்குத் தெரியாமல் ஏதேனுமொன்றை மறைத்து வைத்திருந்து உண்ணுகின்ற தந்தையும் ஒரு திருடர் தான். ஆசிரமத்திலுள்ள அறைகள் நமக்கெல்லாம் பொதுவானது. அந்த அறையினின்று இரகசியமாக ஒரு சர்க்கரைக் கட்டியை எடுத்தாலும் அது திருட்டுத்தனம்தான். இன்னொருவருடைய பொருளை எடுத்துக் கொள்வதென்றால் அதற்கு அவருடைய உத்தரவு வேண்டும். அத்தகைய உத்தரவின்றி அவர்கண் முன்பாகவே நாம் அப்பொருளை எடுத்துக் கொண்டாலும் அதைத் 'திருட்டு என்றே சொல்ல வேண்டும். சொந்தக்காரர் யாரெனத் தெரியாமல் கீழே கிடக்கும் ஒரு பொருளை சுவீகரித்து விடுவதும் திருட்டுத்தான். சாலையோரத்தில் கிடக்கும் எந்தப் பொருளும் அவ்வூரை ஆள்பவரைத் தான் சேரும். ஆகவே ஆசிரமத்தருகில் கீழே கிடக்கும் பொருளை ஆசிரமக் காரியதரிசியிடம் கொடுக்க வேண்டியது தான் கடமை. அது ஆசிரம சொத்தாகிவிட்டால் அக்காரியதரிசி போலீசாருக்கு அதை அனுப்பிவிடுவார்.

இதுவரையில் விஷயங்களெல்லாம் எளிதில் புரிந்ததல்லவா? 'திருட்டு' என்பதில் இன்னும் எவ்வளவோ விதங்களிருக்கின்றன. ஒருவருடைய உத்தரவு பெற்றுக் கொண்டு ஒரு பொருளை வாங்கிக் கொண்ட போதிலும் அப்பொருளுக்கு நம்மிடம் 'உபயோகம் ஏதும் இல்லாவிட்டால் அதையும் 'திருட்டு' என்றே கூறவேண்டும். ஆகவே தேவையின்றி பொருள்களைப் பிறரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாகாது. உணவுப் பொருள்கள் சம்பந்தமாக இத்தகைய திருட்டுக்கள் நடப்பது இயல்பு. எனக்கு வேண்டாத பழத்தை நான் பெற்றுக் கொள்வதும், எனது தேவைக்கு மேல் அதிகமாக பெற்றுக் கொள்வதும் 'திருட்டு'த்தான். நமக்கு எவ்வளவு தேவையென்று நமக்குத் தெரியுமா? நமது தேவைகளை அதிகரித்துக் கொள்வதனால்

நாம் நம்மையறியாமலே நம்மை திருடர்களாக்கிக் கொள்கின்றோம். இந்த விஷயத்தைப் பற்றி நாம் சிறிது சிந்திப்போமாயின் நமது தேவைகள் பலவற்றை நாம் சுருக்கிக் கொள்ள முடியும். 'திருடாமை'யின் தத்துவத்தைப் பின்பற்ற விரும்புபவர் கொஞ்சம் கொஞ்சமாகத் தனது தேவைகளையெல்லாம் சுருக்கிக் கொள்வார். இந்தச் சட்டத்தினின்று தவறியவர் பலர் உலகில் இருப்பதால் தான் உலகத்தில் தாங்கொண்ணா வறுமை நிறைந்திருக்கின்றது.

இதுவரை பருப்பொருள்களின் திருட்டைப் பற்றி சொல்லப்பட்டது. இது தவிர நுட்பமான சாமான்களின் திருட்டொன்று இருக்கின்றது. அதுதான் மனிதரைப் பாழ் பண்ணுவதாகும். பிறருடைய பொருள்களைத் தனதாக்கிக் கொள்ளலாமென்று ஆசையோடு கண்களை செலுத்துவதை 'மனத்தால் நடத்தும் திருட்டு' என்றே சொல்ல வேண்டும். ஒருவர் உணவு மறுத்து உபவாசமிருப்பதாக வைத்துக் கொள்வோம். அவர் பிறர் உணவு உட்கொள்வதைப் பார்த்து மனத்தால் ஆசைப்பட்டு விட்டாரானால் இத்தகைய 'மனத்திருட்டு' என்ற குற்றத்துக்கு உள்ளாகின்றார். உபவாசமிருக்குங்காலத்தில் உபவாசத்திற்குப் பின்பு என்னென்ன சாப்பிடலாமென யோசனை செய்து கொண்டிருப்பாராயின் அதுவும் திருட்டுத் தனம்தான். 'திருடாமை' என்ற விரதத்தை அனுஷ்டிப்பவர் நாளைக்கு என்ன செய்வது' என்ற கவலையை ஒருபோதும் கொள்ள மாட்டார். எல்லா திருட்டுக்கும் நாளைக்கு என்ற சிந்தனையே ஆதி காரணமாயிருக்கிறது.

இன்றைக்கு ஒரு பொருளை அபகரிக்க மனதால் ஆசைப்படுகின்றோம். நாளைக்கு அதை எடுத்துக்கொள்ள நேராகவோ, மறைவாகவோ பிரயத்தனங்கள் செய்கின்றோம். ஆகவே எல்லாம் 'திருட்டு' தானே!

எண்ணங்களைப் பிறரிடமிருந்து அபகரிப்பதும் 'திருட்டு'த்தான்."இந்தப் பேரெண்ணம் என்னுடையது'' என்று மார்தட்டிக் கொள்வது தப்பிதம். ஏனெனில் அந்த எண்ணம் பிறருடைய எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டிருக்கலாமன்றோ! இதை 'எண்ணத்திருட்டு' என்று சொல்ல வேண்டும். உலக சரித்திரத்தில் எத்தனையோ புலவர்கள் இத்திருட்டுக்

குற்றத்தைச் செய்திருக்கின்றனர். 'இலக்கியத்திருட்டு' என்பது இப்போதும் இயல்பான ஒன்றாயிருக்கிறது. நான் ஆந்திர தேசத்தில் ஒரு சர்க்காவைப் பார்த்துவிட்டு அதே மாதிரி ஆசிரமத்தில் ஒன்றைச் செய்து, "அது நான் கண்டுபிடித்தது' என்று சொல்வேனானால் அதுவும் திருட்டுத்தான்.

ஆகவே திருடாமை என்ற உன்னத தத்துவத்தைப் பின்பற்ற வேண்டுபவர் அடக்கம் மிகுந்தவராகவும், அறிவாளியாகவும், எச்சரிக்கையுடையோராகவும், எளிமை வாழ்வை ஏற்றுக்கொண்டவராகவும் இருத்தல் வேண்டும்.

## 6. எளிய வாழ்க்கை

திருடாதிருப்பதும், சேமிக்காதிருப்பதும் ஒன்றெென நான் கருதுகின்றேன். தேவையில்லாதவர் ஒரு பொருளைத் தன்னிடம் சேமித்து வைத்திருப்பாராயின் அதையும் திருட்டுச் சொத்தாகவே எண்ண வேண்டியிருக்கிறது. வருங்காலத்துக் காகவே சேமித்து வைப்பது வழக்கம். சத்திய வாழ்க்கையைத் தேடுபவர், அன்பென்ற தர்மத்தைக் கடைப்பிடிக்க விரும்புபவர் நாளையதைப் பற்றி யோசிக்கக் கூடாது. நாளைய தினத்திற்கென்று கடவுள் எதையும் படைத்திருக்கவில்லை. அன்றாடம் வேண்டியதைத்தான் அவர் தந்து கொண்டிருக்கிறார். கடவுளிடம் நமக்கு உண்மையான பக்தி இருக்குமாகில் நமக்கு அவர் தினந்தோறும் வேண்டிய ஆகாரத்தைத் தந்தே தீருவார். இந்த நம்பிக்கையோடு வாழ்ந்த ஸாதுக்களும், பக்தர்களும் தங்களுடைய அனுபவத்தில் இவ்வாறே வாழ்ந்ததை நாம் அறிவோம். 'அன்றாடம் ஆகாரம்' என்ற தெய்வீகமான உண்மையை நாம் அறியாமையினாலோ, அலட்சியத்தினாலோ தெரிந்து கொள்ளாமலிருக்கிறோம். பணக்காரர்களிடம் ஏராளமாகப் பொருள்கள் தேவைக்கு மிஞ்சிக் கிடக்கின்றன. அவைகள் வீணாகின்றன. அதே சமயத்தில் கோடிக்கணக்கான மக்கள் வாழ்வுக்கு அவசியமான பொருள்களின்றி, பட்டினி கிடந்து சாகின்றனர். ஒவ்வொரு மனிதரும் அவரவருக்கு வேண்டியதை மட்டும் வைத்துக் கொண்டிருப்பாராயின், உலகத்தில் ஒருவருக்காவது தேவையென்பது இருக்காது. யாவரும் திருப்தியோடு வசிப்பார்கள். இப்போது இருக்கும் நிலைமையைப்

பார்த்தால் பணக்காரரும் அதிருப்தியோடு தான் வாழ்கிறார். ஏழை லட்சாதிபதியாக வேண்டுமென்று ஆசைப்படுகின்றார். லட்சாதிபதி கோடீஸ்வரராக வேண்டுமென்று ஆசையுறுகிறார். பார்க்கப்போனால் ஏழையைக் காட்டிலும் கேவலமாக இருக்கிறது பணக்காரர் ஆசை. இந்த விஷயத்தில் உலகம் முழுவதும் சந்துஷ்டியடையும் வண்ணம் செய்வதில் பணக்காரர்தான் அக்கறை காட்ட வேண்டும். தங்களுடைய சொத்தை ஓர் குறிப்பிட்ட அளவுக்கு வைத்திருப்பார்களாயின் ஏழைகளுக்கு சாப்பாடு கிடைக்கும்; அவர்களுக்கும் சந்தோஷ வாழ்க்கை ஏற்படும். வாழ்க்கையை அனுபவிக்க விரும்புபவர் பறவைகளைப் போல வாழ வேண்டும். அவைகளின் தலைக்குமேல் கூரையில்லை; நாளைக்கென்று அவை உணவு சேமிப்பதில்லை; அவரவருக்கு உணவு வேண்டியதுதான். ஆனால் அதைத் தேடிக் கொடுப்பது கடவுளின் வேலையாகும். இந்த உன்னதமான வாழ்க்கையை ஒரு சிலரே தான் நடத்த முடியும். நம்மைப் போன்ற சாதாரணமானவர்கள் அந்த லட்சியத்தை நினைப்பில் வைத்த வண்ணம் வாழவேண்டும். அதன் திட்டப்படி நம்முடைய சொத்தைப் பரிசீலனை செய்து பிரதிதினமும் குறைத்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

நாகரீகம் என்பது என்ன? தேவைகளைப் பெருக்கிக் கொண்டேயிருப்பது நாகரீகமல்ல. அவைகளைச் சுருக்குவது நாகரீகம். அதனால் ஏற்படும் சுகத்தை, சந்துஷ்டியை அனுபவிப்பது நாகரீகம். பிறருக்குச் சேவை செய்யும் தன்மையைப் பெருக்குவது நாகரீகம். இந்த ஒளியில் பார்ப்போமானால் நாம் வைத்துக் கொண்டிருப்பவைகள் மிகையானவை என்பது புலனாகும். நாம் வைத்துக் கொண்டிருக்கும் அனைத்தும் அவசியமானவைகள் எனக் கூறுவதற்கில்லை. அவ்வாறு வைத்துக் கொண்டிருப்பதால் நம்மிடம் திருடும்படியாக நாம் தூண்டுகிறோம்.

சத்திய ரீதியாகப் பார்த்தால் நம்முடைய உடலைக் கூட ஓர் ‘உடைமை’ என்றே சொல்ல வேண்டும். ஆத்மாவுக்கு போக வேட்கை உண்டாவதால்தான் உடல் படைக்கப்-படுவதாக அறிஞர் சொல்கின்றனர். இந்த அசட்டு வேட்கை தொலைந்து போய்விட்டால் உடலிற்கு அவசியமில்லாது

போகின்றது. பிறப்பு இறப்பு என்ற கொடிய சுழலினின்று ஆத்மன் விடுதலையடைகின்றான். ஆத்மன் எங்கும் நிரம்பியவன். அவன் கூண்டு போன்ற இந்த சடலத்தில் ஏன் அடைபட்டுக் கிடக்க வேண்டும்? இந்த சடலத்தினிமித்தம் அவன் ஏன் கொடுமைகளை இயற்ற வேண்டும்? இந்தக் கூட்டிற்காகப் பிறரை ஏன் கொல்ல வேண்டும்? இவைகளையெல்லாம் ஆலோசித்தால் முற்றிலும் துறத்தல்" என்ற பேருண்மை தோன்றுகிறது. இன்னும் ஆராய்ந்தால் இந்த உடல் இருக்கும் வரை பிறருக்காக இதைக் கொண்டு சேவை செய்ய வேண்டுமென்ற நோக்கம் ஏற்படுகின்றது. பிறகு சோற்றுக் கவலையை மறந்து சேவையையே தேடி நாம் அலையத் தொடங்குவோம். நாம் உண்பதும், குடிப்பதும், தூங்குவதும், விழித்திருப்பதும் பிறருக்குச் சேவை செய்வதற்காகவே செய்கிறோம் என்ற எண்ணமேற்படுகின்றது. இதுதான் ஆனந்த வாழ்வு! இதுவே அழகான காட்சி! இந்த முறையின்படி நமது உடைமைகளைப் பற்றி நாம் ஆராயத் தொடங்குவோம்.

பொருள்களை வைத்துக் கொண்டிருப்பது போல எண்ணங்களை வைத்துக் கொண்டிருப்பதையும் பரிசீலனை செய்ய வேண்டும். அனாவசியமான அறிவை மூளையில் திணித்துக் கொண்டிருப்பவன் மேலே சொன்ன உயரிய தத்துவங்களை அறிந்து கொள்ள வேண்டும். கடவுளிட-மிருந்து நம்மைத் தள்ளும் எண்ணங்களையும், அவரிடம் நாம் அணுகாவண்ணம் தடுக்கும் எண்ணங்களையும், களைந் தெறிய வேண்டும். கீதையின் 13-வது அத்தியாயத்தில் ஞானமென்பது என்னவென்று விவரிக்கப்பட்டிருக்கிறது. அடக்கம் தான் அறிவு என்றும், மற்றவையெல்லாம் அறிவின்மை என்றும் கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த உண்மையின்படி பார்த்தால் நாம் இப்போது ஞான மென்று நினைத்து ஒட்டிக் கொண்டிருப்பனவெல்லாம் அஞ்ஞானமென்றும் அவைகளால் யாதொரு பலனுமில்லை-யெனவும் அறிந்து கொள்கிறோம். அவை நமது மனதை அலைக்க செய்வதோடு அறிவையே அடியோடு அழித்து அதிலும் அதிருப்தியும் ஏற்படுமாறு செய்து விடுகின்றது. ஆனால் நாம் ஒன்றுமே செய்யாமல் ஜடமாய்க் கிடப்பதற்கில்லை. நம்முடைய வாழ்க்கையின் ஒவ்வொரு நொடியும் ஏதாவது வேலை செய்து கொண்டேயிருக்க

வேண்டும். அதெல்லாம் சத்வமாயும், சத்திய நோக்கத்தோடும் இருக்க வேண்டும். தனது வாழ்க்கையைச் சேவையின் நிமித்தம் செலவிடுபவர், ஒரு நொடியையும் வீணாக்க மாட்டார். ஆனால் சன்மார்க்கத்தையும் துன்மார்க்கத்தையும் பற்றியே ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளவேண்டியிருக்கிறது. இந்தப் பகுத்தறிவினாலேயே சேவையினிடத்து ஊர்ஜிதமான நம்பிக்கை ஏற்படும்.

## 7. பயமின்மை

பகவத் கீதையைப் படித்த ஒவ்வொருவருக்கும் 16-வது அத்தியாயத்தினின்று பயமின்மை என்பது தெய்வீகமான அருங்குணம் என்பது தெரியவரும். இவ்வாறு சொல்லப்-பட்டிருப்பது கவிசாதுர்யமென்று சொல்வதா? அல்லது வாஸ்தவமாகவே குணாதிசயங்களில் பயமின்மையே சிறந்தது என்று ஒப்புக் கொள்வதா? ஆனால் எனது அபிப்பிராயத்தில் கீதையில் சொல்லியிருப்பது போல 'பயமின்மை' என்ற குணத்துக்குத்தான் முதல் இடம் தருவது சரியானது. ஏனெனில் அந்தக் குணத்திலிருந்துதான் இதர நல்ல குணங்கள் ஒரு மனிதரிடம் பெருகுகின்றன. பயத்தை உதறியெறிந்தவர் தான் சத்திய சோதனைக்கு ஏற்றவர். பயமில்லாதவரால் தான் அன்பு மதத்தை அனுஷ்டிக்க முடியும்.

"ஹரியின் வழி தீரர்கள் செல்லும் பாதை, கோழைகளால் அதில் போகமுடியாது" என்று பிரீதம் என்பார் சொல்லியிருக்கிறார். இந்தத் தீரர்கள் கத்தியோ, துப்பாக்கியோ, இதர மிருக பல ஆயுதங்களையோ தரித்தவர்கள் அன்று. இவைகள் கோழைகளைத்தான் தாக்கும் சக்தியுடையவை. ஆனால் பகவான் வகுத்த பாதையில் செல்பவர்கள் பயமின்மை என்ற ஆயுதத்தையே பூண்டு பவனி வருகின்றனர்.

உலக விவகார சம்பந்தமான பயங்களினின்றும் விடுதலை பெற்றவரே தீரர் வியாதியிடத்து பயம், காயம் பட்டால் பயம், சாவுக்குப் பயம், பந்துமித்திரர்களைப் பறி கொடுத்தால் நடுக்கம், கீர்த்தி போய்விடுமோ என்ற கிடுகிடுப்பு, பிறருக்கு துன்பமேற்படுமோ என்ற பயம், இத்தகைய பலவிதமான பயங்களையும் உதறியெறிய

வேண்டும். மரண பயத்தை உதறியெறிந்த மனிதருக்கு இதர பயங்கள் இல்லையென்று சொல்லிவிட முடியாது. சாவுக்குத் துணிந்த நம்மவருள் சிலர் சில்லறைத் தொந்தரவுகளுக்கு நடுங்கி ஓடிப்போகின்றோம். தாங்கள் செத்துப் போவதற்குத் துணிந்தவர் பலர் தங்கள் உறவினர் சாவதை சகிக்க முடியாதிருக்கின்றனர். லோபிகள் தங்கள் உயிரைக் கொடுப்பதற்கு இசைந்தாலும் பொருளைப் பறி கொடுப்பதற்கு இசைய மாட்டார்கள். தங்கள் கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எத்தனை அநியாயங்களை வேண்டுமானாலும் செய்வதற்குச் சிலர் ஆரம்பித்து விடுகின்றனர். உலகோர் ஒன்றைத் பழிக்கின்றார்களென்று பயந்து அக்காரியத்தைச் செய்வதற்குச் சிலர் தயங்கி விடுகின்றனர். சத்திய சோதனையிலிடுபடுபவர் இந்தப் பயங்களையெல்லாம் வெல்ல வேண்டும். முன்னொருக்கால் அரிச்சந்திரன் எவ்வாறு சத்தியத்தினிமித்தம் அனைத்தையும் தியாகம் செய்தானோ அவ்வாறே சத்திய சோதகனும் தியாகம் செய்ய வேண்டும். அரிச்சந்திரனின் கதை கேவலம் உவமைக் கதையாகவே இருக்கலாம். ஆயினும் சத்திய உபாஸகனுடைய சொந்த அனுபவத்தினின்று கண்டறிந்தால் அரிச்சந்திரனின் சரிதை எல்லாக் கதைகளையும் விடச் சிறந்ததென்பது அவருக்குத் தெரிய வரும்.

ஆனால் ஆண்டவனை அறிந்தவரால்தான் பயமின்மையை சம்பூர்ணமாக அடைய முடியும். மாயையின் மயக்கத்தினின்று அவரால்தான் விடுதலையடைக்கூடும். இத்தகைய நிலையை அடைவதற்கு விடாமுயற்சியும், தன்னம்பிக்கையும் மனிதருக்கு ஏராளமாக இருக்க வேண்டும்.

உலக சம்பந்தமான பயங்களை விட்டுவிட வேண்டுமென முதலில் நான் கூறினேன். அதே மாதிரி உள்ளூர மனதில் ஏற்படும் பயங்களையும் நாம் விட்டுவிட வேண்டும். மிருக இச்சை, கோபம் முதலியவை நம்மை மிரட்டுகின்றன. நம் வீட்டிலேயேயுள்ள இந்தத் துரோகிகளை வென்றோமானால் வெளியேயுள்ள எதிரிகளை வெல்வது வெகு சுலபமாகின்றது. உடலினிடத்திலுள்ள இச்சை தான் மனிதரைக் கவர்ந்திருக்கின்றது. அதைச் சுற்றிச் சுற்றி அநேக

பயங்கரங்கள் சுழன்று கொண்டிருக்கின்றன. பணத்திடத்துப் பற்றுதல், குடும்பத்திடத்து மோகம், உடலிடத்துப் பற்றுதல் இவைகளை உதறிவிட்டால் நமது ஹிருதயத்தில் 'பயம்' என்ற உணர்ச்சிக்கு இடமேது? 'தேன தியக்தேன பூஜ்ஜிதாக' என்று உபநிஷத்தில் சொல்லியபடி 'உலகப்பொருள்களைத் துறந்து இன்பமடைதலே சாலச் சிறந்தது. சொத்து, குடும்பம், சரீரம் இவைகள் அப்படியே இருப்பன. நாம் தான் மனதை மாற்றிக் கொள்ள வேண்டும். ஏனெனில் இவைகள் எல்லாம் நம்முடையனவல்ல. பகவானுடைய ஒரு உலகத்தில் எதுவும் நம்முடையதாகாது. ஏனெனில் நாமும் அவனுடையவர்களே! ஆகவே நாம் ஏன் பயப்பட வேண்டும். உலகப் பொருள்களின் தர்மகர்த்தாக்களாக நாம் இருக்க வேண்டுமேயன்றி, சொந்தக்காரர்களாக நம்மை எண்ணிக் கொள்ளலாகாது. யாருக்காக நாம் வேலை செய்து வருகிறோமோ அவர் வேண்டிய சக்திகளை நமக்கு அளிப்பார். இவ்வாறு நாம் எஜமானர்களல்லவென்று நினைத்து ஊழியர் என எண்ணிக் கொண்டோமானால், தூசிக்கும் கீழ்ப்பட்டவர்களென நினைத்துக் கொண்டோமானால், நம்மைச் சூழும் பயமெல்லாம் பனிடபோல விலகிவிடும். பிறகு நாம் சாந்தக் கடலில் திளைப்போம்; சத்திய நாராயணனை நேருக்கு நேர் தரிசிப்போம்.

## 8. தீண்டாமை விலக்கு

புதிதாக ஏற்பட்ட நியமங்களில் தீண்டாமை விலக்கும் ஒன்று. 'நாக்கை அடக்குதல்' என்ற விஷயம் எப்படி புதிதாய்த் தோன்றுகிறதோ அதேபோல இதுவும் புதிதாய்த் தோன்றக்கூடும். ஆனால் நமது அனுஷ்டானங்களில் இது முக்கியமானது. தொட்டதினால் தீட்டு ஏற்படுகிறதென்பது தீண்டாமையின் முக்கிய அம்சமாகும். 'அக்கா' என்றவர் கூறியபடி இதை 'நல்ல மரத்தை கெடுக்க வந்த புல்லுருவி என்றே கூறவேண்டும். மதம் என்ற போர்வையை போர்த்திக் கொண்டு மதத்தை கெடுத்துக் கொண்டிருக்கிறது இது.

உலகில் தீண்டத்தகாதவர் என்று எவருமேயில்லை. ஏனெனில் ஒரே நெருப்பின் ஜ்வாலைதான் ஒவ்வொருவரும். ஆகவே மனித ஜன்மமெடுத்தோர்

எவரையும் தீண்டாதவர் என்று ஒதுக்கி வைப்பது தவறு. செத்துப் போன உடலைத் தொடலாகாதென்பன போன்ற மூடநம்பிக்கைகளையும் உதறி விட வேண்டும். இறந்து போன மனிதன் மீது நாம் இரக்கம் பாராட்ட வேண்டாமா? மரியாதை காட்ட வேண்டாமா? தேகாரோக்கிய விதிகளை ஆலோசித்து செத்த பிணங்களைத் தொட்ட பின்பு குளியல் செய்ய வேண்டுமென்ற நியதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எண்ணெய் தேய்த்துக் கொண்ட பின்னரும், க்ஷவரம் செய்து கொண்ட பின்னரும் நாம் குளிப்பது போலவே இதுவுமாகும். இந்த சந்தர்ப்பங்களில் ஒருவர் குளிக்கத் தவறிவிட்டால் அவரை அசுசியடைந்தவராகக் கருதுவோ-மேயன்றி பாபியென்று கருதுவதில்லை. குழந்தையின் மலத்தைத் தொட்ட பின்பு தாய் கை கால்களைக் கழுவாவிட்டாலும், குளிக்காவிட்டாலும் அவளைத் தீண்டாதவளாகக் கருதலாம். ஆனால் அந்தக் குழந்தை அவளை அப்போது தொடலாம் அல்லவா?

ஆனால் தோட்டிகள், ஒட்டர்கள் முதலியவர்கள் பிறவியிலேயே 'தீண்டத் தகாதவர்' என்று கருதப்-படுகிறார்கள். அவர்கள் எத்தனை வருஷம் ஸ்நானம் செய்தாலும் எத்தனை சோப் தேய்த்துக் கொண்டாலும், எவ்வளவு சுத்தமாக ஆடை அணிந்து கொண்டாலும், வைஷ்ணவச் சின்னங்களைத் தரித்துக் கொண்டாலும் உயர்ந்த தொழிலைச் செய்து ஜீவித்தாலும், அவர்களைத் தீண்டத்தகாதவர்' என்றே விலக்கி வைக்கிறார்கள். இதைப்போன்று மததர்மத்துக்கு அநியாயம் வேறுண்டோ? இந்த வழக்கத்தை ஒழிக்க வேண்டாமா? தீண்டாமை விலக்கை ஆசிரம நியமங்களில் ஒன்றாக வைத்துக் கொள்வதினால் நமக்கு அதிலுள்ள சிரமத்தைக் காட்டுகின்றோம். தீண்டாமை என்பது ஹிந்து தர்மத்தின் பிரிவன்று: கட்டளையுமன்று. தீண்டாமை என்பது ஒரு பிளேக், உண்மை ஹிந்து ஒவ்வொருவரும் இந்தக் கொடுமையை ஒழிக்கக் கடமைப்பட்டிருக்கிறார். இதைப் பாபமென்று கருதி ஒவ்வொரு இந்துவும் ஹரிஜனங்களோடு சகோதரத்துவம் பாராட்ட வேண்டும். அவர்களிடம் அன்பு பூண்டு அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும். அவர்கள் துயர்களைக் களைவதால் தான் புனிதமாவதை உணர வேண்டும். அவர்களுடைய அறியாமையும், பல

வருஷங்களாக அடிமைத்தனத்தில் இருந்ததால் ஊறிப்-போயிருக்கும் கெட்ட குணங்களையும் போக்கடிக்குமாறு உதவி புரிய வேண்டும். இந்தப் புனித கைங்கரியத்தைப் பற்றி இதர இந்துக்களிடம் பிரசாரமும் செய்ய வேண்டும். அத்யாத்மீக நிலையினின்று இந்த தீண்டாமை விலக்கைப் பற்றி ஒருவர் ஆலோசித்தால் தீண்டாமை விலக்கினால் ஏற்படக்கூடிய ராஜிய பலன்களும் பொருளாதார முன்னேற்றமும் அற்பமானவைகளெனவே தோன்றும். இந்தப் பலன்களைப் பற்றி சிறிதும் சிந்தியாமலேயே ஹரிஜனங்களோடு நட்புரிமை பாராட்ட வேண்டும். சத்திய சோதனையிலீடுபட்டவர்கள் ஜட வஸ்துக்களின் லாபங்களைப் பற்றிச் சிறிதும் சிந்திக்க மாட்டார்கள். அது அவர்களுக்கு ஒரு பொருட்டுமல்ல. ஆனால் அவர்கள் வாழ்க்கையோடு பிணைக்கப்பட்டிருக்கும் சில உண்மை-களை மட்டும் அடைய எப்போதும் பாடுபடுவார்கள். இந்த நியமத்தின் உன்னத நோக்கத்தை உணர்ந்து விட்டால் தீண்டாமை என்ற தீங்கின் பூர்ண வடிவமும் புலனாகும். இது கடுகைவிடச் சிறிய சமாசாரமேயாயினும் இது பெரிதாக வளர்ந்து, வளர்ந்த இடத்தையே அடியோடு அழித்து விடும் தீய பயிர் என்பது தெரிய வரும். இது மனித வர்க்கத்தின் எல்லாத் துறைகளிலும் நுழைந்திருக்கிறது. நம்மை நாமே கவனித்துக் கொள்வதற்கும் நேரம் வைத்துக் கொள்ளாமல் நியம நிஷ்டைகளில் நாம் ஈடுபடுகிறோம். தூய்மையாக உணவு சமைத்துக் கொள்கிறோம். ஆனால் கடவுளுக்குப் பிரார்த்தனை செய்வதாகச் சொல்லிக் கொள்ளும் சமயத்தில் கடவுளைப் பற்றி எண்ணாமல் நமது ஆசாரத்தைப் பற்றியே சிந்தித்து நம்மையே பூஜித்துக் கொள்பவராகின்றோம்.

வெறுமனே ஒரு ஹரிஜனனை நண்பரென ஏற்றுக் கொண்டு விடுவதோடு இந்த நியமம் பூர்த்தியாகிவிடாது. ஒவ்வொரு ஜீவனையும் நமது சகோதரராக பாவிப்பது தான் இந்த நியமத்தின் லட்சணம். தீண்டாமை விலக்கு என்றால் உலகோரனைவருக்கும் சேவை செய்வதென்றே அர்த்தம். அதாவது அது அஹிம்சா தர்மத்தில் அடங்கிய சேவையாகும். ஒரு மனிதருக்கும் இன்னொரு மனிதருக்குமிடையே உள்ள தடைகளை நீக்கி விடுவதுதான்

தீண்டாமை விலக்கின் லட்சியமாகும். இத்தகைய தடைகள் உலகில் எங்கும் பலவிதங்களாயிருந்து வருகின்றன. நமது நாட்டில் அது தீண்டாமை என்று இருந்து வருகின்றது. அதை மதம் இதுவரை ஆதரித்து வந்திருக்கின்றது. லட்சக்கணக்கான மக்களை ஏன் கோடிக்கணக்-கானவர்களை அடிமையிலும் கேவலமாக ஆக்கியிருப்பது இந்தத் தீண்டாமை என்ற பீடையேயாகும்.

## 9. உழைப்பின் பெருமை

உழைத்துத்தான் மனிதர் உயிர் வாழ வேண்டும் என்பது ஈசுவர நியதி. 'ஜீவன உழைப்பு' என்று டால் ஸ்டாய் எழுதியிருக்கும் வியாசத்தைப் படித்த போது முதன் முதலில் எனக்கு இதில் திடமான நம்பிக்கை ஏற்பட்டது. ஆனால் அதற்கும் முந்தியே ரஸ்கின் எழுதிய "இந்த முடிவுக்கோ" என்ற நூலை வாசித்த உடனேயே இந்த விஷயத்தை நான் நன்றாகக் கிரகித்துக் கொண்டு, இதில் பெரும் மதிப்பும் வைக்கத் துவங்கிவிட்டேன். தன் கையால் உழைத்தே தனது உணவை மனிதன் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற ஈசுவர நியதியை முதன்முதலில் வற்புறுத்திச் சொன்னவர் டி.எம். பாண்டாரெப் என்ற ருஷிய நூலாசிரியர்தான். டால்ஸ்டாய் அதைப் பிரபலமாக விளம்பரம் செய்தார். கீதையின் மூன்றாம் அத்தியாயத்திலும் இதே தத்துவம்தான் விவரிக்கப் பட்டிருக்கிறது. என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். "எவன் ஒருவன் யக்ஞம் செய்யாமல் சாப்பிடுகிறானோ அவன் திருட்டுச் சோற்றைத் தின்கிறான்" என்று அந்த அத்தியாயத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. இங்கே சொல்லப்பட்டிருக்கும் யக்ஞம் ஜீவன உழைப்பைதான் குறிக்கின்றது.

தர்க்க முறைப்படி பார்த்தாலும், நாம் இந்த முடிவுக்கே வர வேண்டியிருக்கிறது. உழைக்காத மனிதருக்கு உணவு உண்ண எவ்வாறு உரிமை இருக்க முடியும்? "நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து உண்பாயாக!" என்று பைபிள் கட்டளையிடுகின்றது. ஒரு கோடீசுவரர் நாள் முழுவதும் படுக்கையிலேயே புரள்வதாகவும், சாப்பாட்டைக்-கூட அவனுக்குப் பிறர் ஊட்டுவதாகவும் வைத்துக் கொள்வோம். இப்படியே அவர் நீண்ட காலம் வாழ

முடியாது. வெகு சீக்கிரம் தனது வாழ்க்கையில் அவருக்குச் சலிப்பு ஏற்பட்டு விடும். ஆகையால் தான், தேகப்பியாசத்தின் மூலம் அவர் பசி உண்டாக்கிக் கொண்டு, தனது உணவைத் தானே எடுத்துச் சாப்பிடுகிறார். ஏழையானாலும், பணக்காரரானாலும், ஒவ்வொருவரும் ஏதோ ஒரு ரூபத்தில் தேகாப்பியாசம் செய்தே தீர வேண்டியதாயிருக்கிறது. அவ்வாறாக, அந்த அப்பியாசத்தை ஏன் பொருள்களை உற்பத்தி செய்யும் ஜீவன உழைப்பாக மாற்றிக் கொள்ளக் கூடாது. இந்தக் கேள்வி தானாகவே உதிக்கின்றது. தசைப்பயிற்சியோ சுவாசப் பயிற்சியோ செய்ய வேண்டுமென்று விவசாயிக்கு யாரும் சொல்வதில்லை. மனித வர்க்கத்தில் பத்துக்கு ஒன்பது பேருக்கு மேல் மண்ணை உழுதே ஜிவிக்கின்றார்கள். இவ்வளவு அதிகமான பேருடைய உதாரணத்தைப் பின்பற்றி, மிஞ்சிய பத்தாவது பங்கு மனிதர்களும் தங்கள் ஆகாரத்துக்கு வேண்டிய அளவாவது உழைத்தார்களானால் எப்படியிருக்கும்? உலகமே இப்பொழுதினும் அதிக மகிழ்ச்சியும், ஆரோக்கியமும் அமைதியும் பெற்றுப் பொலியுமே! மேலும், அறிவாளிகள் விவசாயத் தொழிலில் பங்கெடுத்துக் கொள்ளும் பொழுது அத்தொழிலில் இணைந்திருக்கும் பற்பல கஷ்டங்களும் சுலபமாக விலகி விடும். அன்றியும், ஒருவர் கூட பாக்கியின்றி எல்லோருமே ஜீவன உழைப்பின் அவசியத்தை அங்கீகரிக்கும் பொழுது, கொடிய வகுப்பு வித்தியாசங்களெல்லாம் மாய்ந்து போகும். ஜீவன உழைப்பு சகல வர்ணங்களுக்கு பொதுவான விஷயமாகும். உலகம் முழுவதும் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் போராட்டம் நடந்து கொண்டே யிருக்கிறது. ஏழைகள் செல்வர் மீது பொறாமை கொண்டிருக்கிறார்கள். எல்லோருமே தத்தம் உணவைப் பெற உழைப்பில் ஈடுபடுவார்களானால், இந்த வகுப்பு வேற்றுமைகள் ஒழிந்து போகும். பணக்காரர்கள் அப்பொழுதும் உலகத்தில் இருந்து கொண்டேயிருப்பார்கள். ஆனால் அவர்கள் தங்களைத் தர்மகர்த்தர்களென்று எண்ணிக் கொண்டு, தங்கள் பொருளைப் பெரிதும் பொது நன்மைக்கான காரியங்களில் மாத்திரமே செலவழிப்பார்கள்.

அஹிம்சா தர்மத்தை அனுஷ்டித்து, சத்தியத்தை வணங்கி, பிரம்மச்சரியத்தை இயற்கை தர்மமாக

அனுசரித்துவரும் ஒருவருக்கு, ஜீவன உழைப்பு என்பது ஆண்டவன் அருளிய வரப்பிரசாதம் போல் உதவி புரிகின்றது. இவ்வாறாக, இந்த ஜீவன உழைப்பு உண்மையில் விவசாயத் தொழிலாகவே இருக்க வேண்டுமென்று ஏற்படுகின்றது. ஆனால் இப்பொழுது உள்ள நிலைமையில் எல்லோரும் அந்தத் தொழிலில் ஈடுபடக் கூடியவர்களாக இல்லை. ஆதலால், நிலத்தை உழுவதற்குப் பதிலாக, ஒருவர் நூல் நூற்றல், நெசவு, தச்சு, கொல்லு ஆகிய தொழில்களில் எதையாவது ஒன்றைக் கைக்கொள்ளலாம். ஆனால் அப்படிக் கைக்கொள்ளும் தொழிலை, எப்பொழுதும் தமது இலட்சியமாக வைத்துக் கொண்டு விடாமல் புரிந்து வரவேண்டும். ஒவ்வொருவரும் தமக்கு தாமே தோட்டியாகவும் வேலை செய்ய வேண்டும். உணவு உட்கொள்ளுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமாகும் மலம் கழிப்பதும். ஒவ்வொருவரும் தமது மலத்தைத் தாமே எடுத்து சுத்தம் செய்வதுதான் மிகச்சிறப்பாகும். இது சாத்தியப்படாவிட்டால், ஒவ்வொரு குடும்பமும் தன் தன் வீட்டுத் தோட்டி வேலையைத் தானே புரிந்து கொள்ள வேண்டும். ஜன சமூகத்தில் தோட்டி வேலை செய்வதற்கென்றே ஒரு தனி வகுப்பை ஒதுக்கி வைத்திருப்பது பெரும் பிழை என்றே எனக்குப் பல வருஷங்களாகவே தோன்றி வந்திருக்கிறது. தோட்டி வேலை என்பது ஓர் ஜீவாதாரமான சுகாதார வேலையாகும். இதை ஒரு தாழ்ந்த தொழில் என்று முதன் முதல் எந்த மனிதன் சொன்னான் என்பதற்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் நமக்குக் கிடைக்கவில்லை. அவன் எவனாயிருந்தாலும் சரி அவன் செய்த காரியம் நமக்கு சிறிதுகூட நன்மையானதல்ல, நமது குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் யாவரும் தோட்டிகள்தான் என்ற எண்ணத்தை நமது மனதில் பலமாய் பதித்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு பதித்துக் கொள்ளுவதற்கு மிகச் சுலபமான வழி ஒன்று உண்டு; அதாவது, தோட்டி வேலையே நமது ஜீவன உழைப்பாக நாம் கைக் கொள்ளத் துவங்கி விடலாம். இவ்வாறு புத்தி பூர்வமாகத் தோட்டி வேலையை ஏற்றுக் கொண்டால் உண்மையான சமய ஞானத்தைப் பெறுவதற்கும் அது உதவியாயிருக்கும். ஜீவன உழைப்பைப் புரிவதில், குழந்தைகளோ, முதியவரோ,

நோயாளிகளோ விலக்கானவர் அல்ல. அன்றியும், இந்த ஈசுவர நியதியை உலகில் எவரும் மீறாது நடந்து வாழ்வார்களானால் முதியவர்களும் உடலுரம் சிறிதும் குன்றாமலேயிருந்து வருவர்; மனித வர்க்கம் முழுவதுமே நோய் நொடியென்பது இன்னதென்றே தெரியாது சௌக்கியமாக வாழ்ந்து கொண்டிருக்கும்.

## 10. தாராள புத்தி

பிற சமயங்களிடம் தாராள புத்தி காட்ட வேண்டுமென்று யாராவது கூறினால் பிற மதங்களை ஏதோ குறைவாகக் கருதுவது போல ஆகிவிடுமன்றோ! ஆகவே அஹிம்சா தர்மம் நமக்குச் சொல்லித் தருவதென்னவென்றால், நாம் நம் சமயத்திடத்துக் காட்டும் மதிப்பைப் போல பிற மதங்களிடமும் சமத்துவம் காட்ட வேண்டுமென்பதே. 'அன்பு வழியைக் கடைப்பிடிப்பவரும், சத்திய உபாஸகரும் இதை முற்றிலும் ஒப்புக் கொள்வார். சத்தியத்தின் பூரணப் பிரகாசத்தை ஒருவர் அறிந்துவிட்டால் அவன் கடவுளோடு கலந்தவன் ஆகின்றார். ஏனெனில் சத்தியமே கடவுள்! ஆனால் சத்தியத்துக்காகத் தேடி அலைபவர் தன்னிடமுள்ள குற்றங்குறைகளையும் உணர வேண்டாமா? நாம் குற்றங்குறைகளோடிருப்பின் தர்மத்தைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயங்களும் குற்றமுடைய-தாகத் தானே இருக்கும். கடவுளை எப்படி கண்டறிய-வில்லையோ, அவ்வாறே மதத்தின் பூர்ண அர்த்தத்தையும் நாம் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. நாம் கொண்டுள்ள மத எண்ணங்கள் குற்றங்களுடையதாக இருப்பதால், அடிக்கடி அவைகளை மாற்றிக் கொள்வதற்கும் திருத்திக் கொள்வதற்கும் இடமேற்பட்டுள்ளது. சத்தியத்தை அடைய வேண்டுமானாலும், கடவுளை அடைய வேண்டுமானாலும் இந்தச் 'சுழற்சி' நடந்தேயாக வேண்டும். மனிதர்களால் கொள்ளப்பட்டுள்ள மத நம்பிக்கைகள் யாவும் குற்றங்-குறைகளுள்ளவைகளே என்றால் இதில் தாரதம்யங்களைக் கூறுவது எங்ஙனம்? எல்லா மத நம்பிக்கைகளும் சத்தியத்தை வெளிப்படுத்தவே ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அந்த நம்பிக்கைகள் குற்றங் குறைகளுடையவையாதலால், தப்பு வழியில் செல்ல இடமேற்படுகிறது. பிற மதங்களிடம் பக்தி காட்டுவதென்ற அம்மதங்களில் உள்ள தப்பிதங்கள்

நம்மை உறுத்த வேண்டுவதில்லை. ஆனால் நாம் கொண்டுள்ள நம்பிக்கைகளில் உள்ள தவறுகளைச் சீர்திருத்தம் செய்து கொள்ள நாம் தயாராயிருக்க வேண்டும். எப்போதும் இந்தத் தவறுகளைத் திருத்துவதினின்று வழுவக்கூடாது. எல்லா மதங்களையும் சமமாகப் பார்ப்போமானால், பிற மதங்களில் உள்ள நல்ல விஷயங்களைக் கிரகித்துக் கொள்வதை நாம் நமது கடமையென்றே எண்ணுவோம்.

உடனே ஒரு கேள்வி ஏற்படலாம். உலகில் இத்தனை மத நம்பிக்கைகள் இருப்பானேன்? ஆத்மா ஒன்றுதான். ஆனால் அது வசிக்கும் உடல்களோ பல. உடல்களின் எண்ணிக்கையைக் குறைத்து விடுவதென்பது இயலாத காரியம் ஆயினும் 'ஆத்மா ஒன்றுதான்' என்ற உண்மையை நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஒரே அடி மரத்தையுடைய மரத்தில் பல கிளைகளும் இலைகளும் இருப்பது போல உலகத்தில் உண்மையாக ஒரு மதம் தானிருக்கிறது; ஆனால் மன சரீரத்தினூடே பாய்வதால் பலவாகத் தோன்றுகிறது. அந்த ஒற்றை மதத்தை வர்ணிக்க முடியுமா? குற்றங் குறைகளுடைய மனிதர் தன்னுடைய மொழித் திறமையைக் கொண்டு அந்த மதத்தை விவரிக்கத் தொடங்குகிறார். இதர மனிதர்களும் குற்றங்குறைகளோடு பிறருக்கு கூறுகின்றார்கள். இதில் யாருடைய சொற்களைச் சரியானதென்று கூறுவது? ஒவ்வொருவருடைய அர்த்தப்படி பார்த்தால் அவரவர் கூறுவது சரியாயிருக்கலாம். ஆனால் ஒவ்வொருவரும் தப்பாகவும் இருக்கலாமன்றோ! ஆதலால் தான் 'தாராள புத்தி' வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. அதாவது மதங்களிடம் கருத்து வைக்காமலிருக்கலாகா-தென்றும் அதனிடம் அறிவோடு அன்பும் செலுத்த வேண்டுமென்றுஏற்படுகிறது. தாராள நோக்கமுடையவர்கள் அத்யாத்மீகமாக ஊடுருவிப் பார்க்கும் திறமை பெறுகின்றார்கள். அவர்களுக்கு 'மதப் பித்தம்' என்பது ஒரு போதும் ஏற்படுவதில்லை. உண்மையான மத அறிவு இருந்தால் மதத்திற்கு மதம் வித்தியாசம் தோன்றவே தோன்றாது. பிறமதங்களிடம் தாராள நோக்கம் காட்டப் பழகினவருக்குத் தன் மதத்தைப் பற்றியும் செவ்வையாக அறிந்து கொள்ள முடியும்.

தீமையினின்று நன்மையைப் பாகுபாடு செய்து அறிவதைத் தாராள புத்தி ஒருபோதும் தடை செய்வதில்லை. உலகத்திலுள்ள எல்லா மதங்களையும் பற்றியே நான் இங்கு குறிப்பிட்டிருக்கிறேன். ஒரே அஸ்திவாரத்தின் மீதுதான் உலகத்தின் மதங்களெல்லாம் கட்டப்பட்டிருக்கின்றன. எல்லா மதங்களிலும் யோகிகளும் யோகினிகளும் தோன்றியிருக்கின்றனர்.

## 11. ஸர்வமத ஸமரசம்

'தாராள நோக்கம்' என்ற விஷயத்தைப் பற்றி இன்னும் கொஞ்சம் விவரிக்க வேண்டுமென்று இச்சையுண்டாகிறது. என்னுடைய சொந்த வாழ்க்கையினின்று சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். ஸபர்மதி ஆசிரமத்தில் இன்று பிரார்த்தனைகள் நடப்பது போலவே ஒரு காலத்தில் (ஆப்பிரிக்காவில்) போனிக்ஸ் ஆசிரமத்தில் அனுதினமும் பிரார்த்தனை நடத்தப்பட்டு வந்தது. ஹிந்துக்களோடு முஸல்மான்களும் கிறிஸ்தவர்களும் பிரார்த்தனைக்கு வருவதுண்டு. காலஞ்சென்ற ரஸ்தோம்ஜி சேத் என்பார் மனதை குஜராத்தி பாடலாகிய 'ராமநாமமே எனக்குப் பிரியமானது' என்ற பாட்டு கொள்ளை கொண்டு விட்டது. அப்போது மகன்லால் என்பார் பிரார்த்தனை கீதங்களைப் பாடிக் கொண்டிருந்தாரென்று நினைக்கிறேன். ரஸ்தோம்ஜி சேத் சந்தோஷம் ததும்ப ராமன் என்பதற்குப் பதிலாக 'ஹோர் மஜாத் என்று பாடுங்கள் என்று கூவினார். அவருடைய வார்த்தையை நாங்கள் ஏற்றோம். சேத்ஜி பஜனைக்கு வந்தபோதெல்லாம் அவர் விரும்பியவாறே நாங்கள் பாடிவந்தோம். அவர் வராதபோது கூட நாங்கள் அவ்வாறு பாடியதுண்டு. ராமநாம என்ற பதத்திற்குப் பதிலாக 'ஹோர்மஜாத்' என்று நாங்கள் பாடி வந்தோம். தாது சேத் என்பாரின் புத்திரனான ஹுசேன் என்பார் போனிக்ஸ் ஆசிரமத்தில் வசித்து வந்தார். அவர் அனுதினமும் பிரார்த்தனைக்கு ஓடி வருவது வழக்கம். பக்க வாத்தியங்களோடு இனிமையான குரலில் "உலகம் என்ற இப்பூந்தோட்டம் சிலநேரமிருக்கும் இன்பமே" என்ற கருத்துடைய பாடலை வெகு அழகாகப் பாடுவார். எங்களுக்கும் அந்தப் பாடலைச் சொல்லித் தந்தார். நாங்கள் அனைவரும் அப்பாடலைப்

பிரார்த்தனைகளில் பாடியதுண்டு. சத்திய சேவகரான ஹுசேன் என்பாரின் ஞாபகார்த்தமாக அப்பாடல் ஆசிரம பஜனாவளியிலும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஹுசேனைப் போல சத்தியத்தில் பற்றுக் கொண்டிருந்த இளைஞனை நான் இதுவரை கண்டதில்லை. ஜோஸப் ராயப்பன் என்பார் அடிக்கடி போனிக்ஸ் ஆசிரமத்துக்கு வருவதுண்டு. அவர் ஒரு கிறிஸ்துவர். ஆயினும் "வைஷ்ணவ ஜனதோ" என்ற பாடலைக் கேட்டால் அவர் பரவசமடைந்து விடுவார். சங்கீதத்தில் அவருக்குப் பிரியமுண்டு. அவர் ஒரு தடவை வைஷ்ணவன் என்பதற்குப் பதிலாக 'கிறிஸ்தவன்' என்று வைத்துப் பாடியதுண்டு. எல்லோரும் அவர் செய்த மாறுதல்படியே பின் தொடர்ந்து பாடினோம். ஜோஸப்பின் அகம் குளிர்ந்து ஆனந்தம் ததும்பியதை அவர் முகத்தில் கண்டோம்.

எங்களுடைய திருப்திக்காக பல மதங்களின் கிரந்தங்களை நான் புரட்டிப் பார்த்த காரணத்தினால் கிறிஸ்து மதம், இஸ்லாமிய மதம், ஜொராஸ்தர் மதம், யூத மதம், ஹிந்து மதம் முதலியவைகளைப் பற்றி தேவையான அளவு தெரிந்தது. அவைகளைப் படித்தபோது ஸமத்வ புத்தியே எனக்கு உண்டாயிற்று. என்னுடைய மதமில்லை என்ற காரணத்துக்காக இன்னொரு மதத்தை இழிவாகப் பேச வேண்டுமென்ற எண்ணம் எனக்கு ஏற்படவேயில்லை. எந்த மதக் கிரந்தமாயினும் சரி அதனிடம் பக்தி காட்டிப் படிப்போமானால் ஒவ்வொன்றிலும் ஒரே 'உண்மை' பொதிந்து கிடப்பது தெரிய வரும். சில விஷயங்கள் எனக்கு அப்போதும் விளங்கவில்லை. இப்போதும் தெரிந்தபாடில்லை. ஆனால் அநுபவத்தில் நான் அறிந்து கொண்டது ஒன்று மட்டும் உண்டு. நம்மால் அறிந்து கொள்ள முடியாததெல்லாம் தப்பிதம் என்று எண்ணிக் கொள்ளலாகாது. ஆதியில் நான் அறிந்து கொள்ளாதிருந்த பல விஷயங்கள் இப்போது வெட்ட வெளிச்சமாக எனக்குத் தெரிகின்றன; அநேக கஷ்டங்களை ஸமத்வ புத்தியால் தாண்டி விடலாம். விநயமும், மரியாதையும் கொள்வோமானால் எல்லா விஷயங்களும் எளிதில் விளங்கியே தீரும்.

ஆனால் மத பக்தி, மதத் துரோகம் இந்த இரண்டிற்குமுள்ள வித்தியாசத்தை நாம் மறந்து விடுவதற்கில்லை. மதத் துரோகத்திடத்து நாம் தாராள புத்தி காட்ட வேண்டியதில்லை. ஆனால் எதெது மதபக்தி எதெது மதத் துரோகம் என்று வித்தியாசம் கற்பிப்பதில் அவரவர் வெவ்வேறு கொள்கை கொள்வானேன்? அப்போது 'ஸ்மத்வ புத்தி' ஏற்படவே ஏற்படாது என்று சிலர் சொல்லலாம். அத்தகைய எண்ணம் தப்பிதமென்று விளக்கவும் இடமுண்டு. ஆனால் நாம் அன்பு மதத்தைப் பின்பற்றுவோமாயின் "மதத் துரோகம்" செய்த சகோதரனிடம் குரோதம் பாராட்ட மாட்டோம். அதற்கு மாறாக அவரிடம் நாம் அன்பு பாராட்டுவோம். அவரது வழிகளின் தவறுகளைச் சுட்டிக் காட்ட விரும்புவோம். அல்லது அவராவது நமது வழிகளின் தவறுகளைச் சுட்டிக் காட்டுவார். ஆகவே பரஸ்பரம் தாராள புத்தி ஏற்படும். எதிராளி அன்பு வழியைக் கடைப்பிடிக்காதவரே யாயினும், பலாத்கார குணம் மிகுந்தவரேயாயினும், நாம் மட்டும் உண்மையான அன்பு காட்டுவதில் தவறாதிருந்தால் கடைசியில் சச்சரவுகளெல்லாம் மறைந்து போகுமென்பதில் ஐயமில்லை. தப்பித வழியில் செல்லுகிறார்களென்று நாம் யாரையாவது கருதுவோமானால், அவர்களிடம் பொறுமையையிழக்காமல் நாம் நடந்து கொள்வோமானால், அதனால் ஏற்படும் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளத் தயாராவோமானால், நமக்கு எதிரே ஏற்படும் சர்வ கஷ்டங்களும் கடைசியில் மறைந்து போகுமென்பதில் சந்தேகமே கிடையாது.

## 12. விநயம்

விநயம் என்பது ஓர் தனி நியமம் அன்று. ஏனெனில், அது பயில முடியாது. என்றாலும், ஒருவருடைய அஹிம்சா தர்மத்தைப் பரீட்சிக்க, விநயம் ஓர் இன்றியமையாத சோதனையாகும். அஹிம்சா தர்மத்தை அனுஷ்டிக்கும் ஒருவருடைய உடம்போடு உடம்பாக விநயம் ஊறிப் போய் விடுகிறது. சத்தியாக்கிரக ஆசிரமத்தை அமைக்கும் முன் தயாரிக்கப்பட்ட அதன் சட்ட திட்டங்களின் நகலை நண்பர்களுக்கு அனுப்பி, அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டிருந்தோம். விநயத்தையும் ஆசிரம நியமங்களுள்

ஒன்றாக வைக்க வேண்டும் என்று காலஞ்சென்ற குருதாஸ் பானர்ஜி யோசனை கூறினார். அந்த யோசனையை அப்போது நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதன் காரணம், மேலே நான் சொன்ன இதே காரணம் தான்.

ஆனால், விநயம் ஆசிரம நியமங்களுள் ஒன்றாக இல்லை என்றாலும், மற்ற எந்த நியமத்தையும் போலவே இதுவும் அவசியமானதுதான். அதிக அவசியமானது என்று கூடச் சொல்லலாம். விநயத்தை எவரும் பயிற்சியினால் அடைய முடியாது என்பதுதான் விஷயம். 'சத்தியத்தை பயின்று கொள்ளலாம். அன்பையும் அவ்வாறே பயின்று கொள்ளலாம். ஆனால், விநயத்தைப் பயில முயல்வது ஆஷாடபூதித் தனத்தைப் பயில்வதையே ஒக்கும். மரியாதையையும் விநயத்தையும் ஒன்றெனக் கருதிக் குழம்பிவிடலாகாது. அகத்திலே நிறைந்த வெறுப்பை அடக்கிக் கொண்டே ஒரு மனிதர் இன்னொருவரை அடி பணிந்து வணங்கலாம். இது விநயமல்ல. வஞ்சகமேயாகும். ஒரு மனிதர் ராம நாமத்தை முணுமுணுத்துக் கொண்டேயிருக்கலாம்; நாள் முழுவதும் ஜபமாலையை உருட்டிக் கொண்டேயிருக்கலாம். ஜனங்கள் நடுவே யதீசுவரரைப் போல் நடமாடிக் கொண்டேயிருக்கலாம். எனினும், அவரது இருதயத்திலே சுயநலம் நிரம்பிக் கிடக்குமானால், அவர் அடக்கம் இல்லாதவராகிறார். அது மாத்திரமன்றி, ஆசாரக் கள்ளனுமாகின்றார்.

தனது விநயத்தைத் தானே அறிந்திருப்பவரே, விநயமுள்ள மனிதர். சத்தியத்தையும் அது போன்ற இதர குணங்களையும் ஒரு வேளை அளந்தாலும் அளக்கலாம்; விநயத்தை மாத்திரம் அளந்து சொல்ல முடியாது. பிறவியிலே ஏற்பட்ட விநயம் என்ற அருங்குணம் வெளியே தோன்றாமல் ஒளிந்து கிடப்பதில்லை. ஆயினும், அவ்விநயத்தை உடையவர் அதனை அறிவதில்லை. இந்த விஷயத்தை விளக்க வசிஷ்டர் - விசுவாமித்திரர் கதை நல்ல உதாரணமாகும். விநயம் உடையவர் தன்னை ஒரு பொருளாக மதிப்பதில்லை. தன்னை ஒரு பொருளாக மதிப்பவருக்கு அகங்காரம் உண்டாகி விடுகின்றது. நல்ல நியமங்களை கடைப்பிடிப்பவர் "இவற்றை நான் அனுசரிக்கிறேன்" என்று செருக்கடையலாகாது. அவ்வாறு

செருக்குறும்பொழுது, அந்த நியமங்கள் அடியோடு பயனற்றுப் போகாவிடினும், பெரிதும் மதிப்பையிழந்து விடுகின்றன. தனது எந்த நற்குணத்தைப் பற்றியாவது செறுக்குறும் மனிதர், ஜன சமூகத்திற்குச் சாபக்கேடு ஆகின்றார். ஜனசமூகம் அவரது குணத்தை அறிந்து பாராட்டுவதில்லை. அவரும் அதனால் ஏதும் நன்மையடைவதில்லை. இந்த அண்ட சராசரத்தில், சகல ஜீவராசிகளும் ஓர் அணுப்பிரமாணமேயாகும். துளி யோசித்துப் பார்த்தால், இந்த உண்மை நமக்குத் தெளிவாக விளங்கும். நாம் இந்த உடம்போடு வாழும் காலமோ மிக அற்பமாகும். ஆதியந்தமில்லாத அகண்டமாய் விளங்குவது காலம். அதில் நூறு வருஷங்கள் என்பது எம்மாத்திரம்? ஆனால் அகங்காரம் என்ற விலங்கை சிதைத்தெறிந்து, மனித சமூகம் என்ற சாகரத்திற்குள் கரைந்து விடுவோமானால், அந்த மனித சமூகத்தின் மாட்சிமையில் நமக்கு பங்கு கிடைக்கின்றது. நம்மை ஒரு பொருளாய் மதித்துக் கொள்வோமானால் ஆண்டவனுக்கும் நமக்கும் இடையே ஒரு சுவர் எழும்பி விடுகின்றது. நம்மை ஒரு பொருளாக நினைப்பதைக் கைவிட்டால் நாம் ஆண்டவனுடன் ஐக்கியப்பட்டு விடுகிறோம். பெருங்கடலின் பெருமை அதிலுள்ள ஒரு சொட்டுத் தண்ணீருக்கும் உரியதாகின்றது. ஆனால், அதே சொட்டுத்தண்ணீர் பெருங்கடலை விட்டுத் தனியே பிரியுமானால், உடனே அது காய்ந்து போகிறது. "வாழ்வு நீர்க்குமிழி போன்றது" என்று நாம் சொல்வது, மிகைப்படுத்திய வார்த்தையல்ல.

பிறருக்குச் சேவை புரிந்து வாழ வேண்டுமானால், விநய வாழ்க்கையையே நடத்த வேண்டும். மற்றவருக்காகத் தனது ஆவியையும் தியாகம் செய்யத் தயாராயிருப்பவருக்கு இம் மண்ணில் தனக்கென ஓரிடம் தேடிக்கொள்ள நேரம் இராது. தாமஸகுணத்தை விநயம் என்று நினைத்து விடலாகாது. அவ்வாறு நினைத்தால் அது தப்பிதமாகும். முற்றிலும் மனித சமூகத்துக்கு சேவை புரிவதிலேயே வாழ்க்கையை ஈடுபடுத்தி, ஊக்கத்தோடு இடைவிடாது உழைத்தல் வேண்டும். அதுதான் உண்மையான விநயமாகும். ஆண்டவன் ஓர் இமைப்பொழுதும் ஓய்ந்திராது, அநவரதமும் தொடர்ந்து உழைத்துக் கொண்டிருக்கிறார். ஆண்டவனுக்கு நாம் சேவை புரிய

வேண்டுமானால் அல்லது அவருடன் நாம் ஐக்கியப்பட வேண்டுமானால், அவரைப்போலவே நாமும் அலுப்பு சலிப்பின்றி உழைக்க வேண்டும். சமுத்திரத்தினின்று பிரிந்து தனித்த ஒரு சொட்டுத் தண்ணீருக்கு ஓய்வு இருக்கலாம். ஆனால் அடக்கிக் கொண்டிருக்கும் சமுத்திரத்துக்கு ஓய்வு என்பதே தெரியாது. நமது விஷயமும் அதே மாதிரியானதுதான். கடவுள்மயமான சாகரத்தில் நாம் இரண்டறக் கலந்து விடும் பொழுது நமக்கும் ஓய்வென்பதே இல்லாது போகின்றது. அந்த ஓய்வு நமக்கு தேவையும் இல்லாமற் போகின்றது. நமது உறக்கங்கூட, செயலாகி விடுகின்றது. ஏனெனில், அகத்திலே ஆண்டவனைப் பற்றிய நினைவுடன்தான் நாம் உறங்குகின்றோம். இந்த அமைதியின்மையே உண்மையான அமைதியாகின்றது. இந்த ஓயா உள்ளக்கிளர்ச்சிதான், வார்த்தைக்கெட்டாத மனச்சாந்திப் பேரின்பத்துக்குத் திறவுகோலாகும். இவ்வாறு ஈசனைப் பரிபூரணமாக அடையும் சரணாகதியே மிக உன்னத நிலை ஆகும். இதனை வர்ணித்துச் சொல்வது கஷ்டம். ஆனால் மனிதர் இவ்வுயர் நிலையை அடைவது அசாத்தியமல்ல. ஆண்டவன் சேவையிலேயே தங்கள் வாழ்க்கையை ஈடுபடுத்தி விட்ட அடியார்கள் பலர் அதனை அடைந்திருக்கிறார்கள். நாமும் அவ்வாறே அடைய முடியும். சத்தியாக்கிரக ஆசிரமவாசிகளாகிய நாம், மனத்தில் கொண்டிருக்கும் உயர்ந்த இலட்சியம் விநயமேயாகும். நமது சகல நியமங்களும், செயல்களும் நாம் இந்த இலட்சியத்தை அடைவதற்கு உதவி புரிவதற்காகத்தான் கடைப்பிடிக்கப் பட்டிருக்கின்றன. நம்மிடத்தில் சத்தியம் குடி கொண்டிருக்கு-மானால், ஏதோ ஒரு நாள் நம்மையறியாமலே இந்த இலட்சியத்தை, நாம் அடைந்தே தீருவோம்.

## 13. உறுதிமொழியின் அவசியம்

உறுதிமொழிகளின் அவசியத்தைப் பற்றி முந்திய கடிதங்களில் அங்கங்கே கொஞ்சம் கொஞ்சம் சொல்லி யிருக்கிறேன். ஆனால், தூய வாழ்க்கைக்கு உறுதிமொழிகள் எவ்வளவு தூரம் உதவியாயிருக்கின்றன என்பதைப் பற்றிச் சற்று விரிவாக ஆராய்வது அவசியமாகும். செல்வாக்கு மிக்க ஒரு அறிவாளிகள் கூட்டம் இருக்கிறார்கள். "சில சட்ட திட்டங்களை என்னவோ கடைப்பிடிப்பது பொருத்தமாக

இருக்கலாம்; ஆனால், உறுதிமொழிகள் அவசியமல்ல'' என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ''உறுதிமொழி எடுத்துக் கொள்வது பலவீனத்தின் அறிகுறி, அதனால் தீங்கும் விளையக் கூடும்'' என்று கூட அவர்கள் கூறுகிறார்கள். "நாம் எந்த விஷயத்தைக் குறித்து உறுதிமொழி எடுத்துக் கொள்கிறோமோ அந்த விஷயம் அது சௌகர்யமானது என்றோ பாபகரமானது என்றோ பின்னால் தெரியவந்தால், என்ன செய்வது? அப்படித் தெரியவந்த பிறகும் உறுதிமொழியைக் கைவிடாது கடைப்பிடிப்பது பிழையென்பது நிச்சயம் என்றும் அவர்கள் வாதிக்கிறார்கள். ''மதுவை விலக்குவது நல்ல காரியந்தான். ஆனால், அபூர்வமாக சில சமயம், உதாரணமாக வைத்திய சம்பந்தமாக, மதுவைப் பருகினால் என்ன தீங்கு ஏற்படப்போகிறது? பூரண மதுவிலக்கு உறுதிமொழி, அநாவசியமாக ஏற்படுத்திக் கொள்ளும் இடைஞ்சலாகும். மதுவிலக்கைப் போலவே தான் மற்ற உறுதிமொழிகளும்' என்று அவர்கள் உரைக்கின்றார்கள்.

ஆனால் உறுதிமொழி என்றால், கண்டபடி மனம் அலைந்து திரியாதபடி தடுக்கும் சங்கற்பம் என்றே அர்த்தம். மனதைக் கெடுத்து இழுக்கக்கூடிய வஸ்துக்களினின்றும் அதைப் பாதுகாக்கக் கூடியது உறுதிமொழிதான். அசௌகர்யம் ஏற்பட்டவுடனே, வளைந்து கொடுப்ப-தானால், அந்த சங்கற்பத்தால் பிரயோசனமேயில்லை. தளரா உறுதியுடன் கூடிய சங்கற்பம் இல்லாவிட்டால், முன்னேற்றம் என்பதே சாத்தியமில்லை. உலகெங்கும் மனித சமூகம் பெற்றிருக்கும் அனுபவத்தைப் பார்த்தால், இந்த அபிப்பிராயமே சரியென்பது புலப்படும். ஒரு பாவ காரியத்தைப் புரிவது என்று உறுதிமொழி செய்து கொள்ளக் கூடாது தான். முதலில் புண்ணியமெனக் கருதிச் செய்து கொண்ட உறுதிமொழி பின்னால் பாபகரமானது என்று தெரிய வந்தால், உடனே அந்தப் உறுதிமொழியைக் கைவிட்டு விடுவதே நியாயம். ஆனால் சந்தேகமாயிருக்கும் விஷயங்கள் குறித்து எவரும் உறுதிமொழி எடுத்துக் கொள்வதில்லை; எடுத்துக் கொள்ளவும் கூடாது. உலக முழுவதும் அங்கீகரிக்கப்பட்ட தத்துவங்கள் சம்பந்தமாக மாத்திரமே உறுதிமொழி எடுத்துக் கொள்ள முடியும்.

அப்படிப்பட்ட உறுதிமொழியும் பாவமாயிருக்கலாமன்றோ என்று நினைப்பது வெறும் மனோபாவமேயாகும். சத்திய உபாசகர், தான் உண்மையைச் சொல்லுவதால் எவருக்கேனும் தீங்கு விளைந்து விடுமோ என்று யோசித்துத் தயங்குவதேயில்லை. ஏனெனில், சத்தியம் ஒரு போதும் தீங்கு பயவாது என்பது அவருடைய நம்பிக்கை. பூரண மதுவிலக்கு உறுதிமொழியும் இதே மாதிரியானது-தான். மதுவிலக்கு விரதத்தைக் கடைப்பிடிப்பவர், ஒன்று வைத்திய விஷயத்தை ஒரு விலக்காகச் செய்து கொள்கிறார்; அல்லது தனது உறுதிமொழியைப் பூரணமாக நிறைவேற்றுவதற்காக உயிரையே விடவும் தயாராகிறார். பூரண மதுவிலக்கு உறுதிமொழிக்காக ஒருவர் உயிரையே இழக்க நேரிட்டால்தான் என்ன? மதுவைக் குடிப்பதால் அவருடைய ஆயுள் நீண்டுவிடும் என்பது தான் என்ன நிச்சயம்? அப்படியே ஒரு விநாடி நேரம் ஆயுள் நீண்டாலும் அடுத்த விநாடியே வேறு எந்தக் காரணத்தாலாவது அது சமாப்தி எய்திவிடவுங் கூடும். மறுபக்கம் பார்க்கலாம். தனது உறுதிமொழியை இழப்பதைவிட உயிரைத் துறப்பதே மேலென எண்ணி ஒருவர் ஆவி நீப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த மனிதருடைய உதாரணம் உலகத்துக்கு நன்மை புரியும் ஒரு பெரும் சக்தியாக மாறி விடுகின்றது. அநேகம் குடிகாரர்களை மதுவின் பிடியினின்று விடுவித்து ரட்சிக்கின்றது. மேலும், உயிரையே துறக்க நேர்ந்தாலும் தங்கள் விரதத்தில் தளர்வதில்லையென்ற உறுதி கொண்ட மனிதர்கள் தான் என்றேனும் ஒரு நாள் ஈசுவரனை தரிசிக்கலாமென்று நம்பிக்கை கொள்ள முடியும்.

உறுதிமொழிகள் செய்து கொள்வது பலவீனத்தின் அறிகுறியல்ல; வலிமையின் அடையாளமேயாகும். என்ன நேர்ந்தாலும் சரி ஒரு காரியத்தைச் செய்தே தீர்வதென்று கங்கணம் கட்டிக் கொள்வதே உறுதிமொழியாகும். அவ்வாறு கங்கணம் கட்டிக் கொள்வது வலிமைக் கோட்டையாகும். 'சாத்தியமான அளவு இதைச் செய்கிறேன்' என்று சொல்லுமொருவர், ஒன்று தனது செருக்கை வெளியிடுகிறார்; அல்லது தனது பலவீனத்தைக் காட்டுகிறார். "சாத்தியமான அளவு செய்கிறேன்" என்று ஒரு நிபந்தனை போட்டுக் கொள்வது, ஆபத்தான சல்லடைக் கண்ணாகும். என் விஷயத்திலும் சரி, பிறர்

விஷயத்திலும் சரி; இதை நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ‘சாத்தியமான அளவு செய்கிறேன்’ என்று சங்கற்பம் செய்து கொண்டால், முதல் வலையிலேயே விழுந்து விடுகிறோம். சாத்தியமான அளவு சத்தியத்தைக் கடைப்பிடிக்கிறேன்’ என்று சொல்லுவதற்கு அர்த்தமே கிடையாது. ‘சாத்தியமான மட்டில், இன்ன தொகையை இன்ன தேதியில் கொடுக்கப் பார்க்கிறேன்’ என்று ஒரு புரோநோட்டை ஒரு வியாபாரிக்கு எழுதிக் கொடுத்துப் பாருங்கள்; அவர் அதை ஏற்றெடுத்தாவது பார்ப்பாரா? மாட்டாரல்லவா? கடவுளும் அதேமாதிரிதான். சாத்தியமான மட்டில் சத்தியத்தை கடைப்பிடிப்பதாகச் சொல்லும் ஒரு மனிதர் எழுதிக் கொடுக்கும் உறுதிமொழி என்ற புரோநோட்டை ஆண்டவனும் ஏற்பதில்லை.

ஆண்டவன் உறுதியே திருவுருவெடுத்தது போன்றவர். இறைவன் தானாகட்டுமே, தமது சொந்த சட்ட திட்டங்களிலிருந்து அவரே ஒரு மயிரிழை பிறழ்வாராயினும், அவர் இறைவனாயிருப்பது ஏது? கதிரவன், நியமங்களைக் காப்பவரில் எல்லாம் தலை சிறந்தவனாயிருக்கின்றான். அதனால் தான் காலத்தை அளக்க முடிகின்றது. பஞ்சாங்கங்கள் கணிக்க முடிகின்றது. சகல வியாபாரங்களும், மனிதர்கள் தங்களுடைய வாக்குத் தத்தங்களைப் பூர்த்தி செய்வதை நம்பியே நடை-பெறுகின்றன. நற்குண வளர்ச்சிக்கும் தனது அனுபவத்துக்கும் அதே வாக்குறுதிகள் அவசியம் அல்லவோ? ஆதலால் ஆத்ம பரிசுத்தத்துக்கும் நமது அனுபவத்துக்கும் உறுதிமொழிகள் அவசியமேயாகும். இந்த விஷயத்தில் நாம் சந்தேகப்படவே கூடாது.

## 14. வேள்வி அல்லது தொண்டு 1

“வேள்வி’ என்ற பதத்தை அடிக்கடி நாம் உபயோகிக்கின்றோம். நூல் நூற்றலும் நித்திய கர்மங்களில் (வேள்விகளில்) ஒன்றென நாம் உயர்வாகக் கூறுகிறோம். ஆகவே “வேள்வி என்பதற்கு என்னென்ன அர்த்தங்களுண்டு என்பதைப் பற்றி ஆலோசிக்க வேண்டியிருக்கிறது.

பிறருடைய நன்மையை உத்தேசித்து யாதொரு பயனையும் கருதாது எதிர்பாராமல் செய்யப்படும் காரியம் 'வேள்வி' என்று சொல்லப்படுகிறது. நற்செய்கையும் வேள்வியே! ஆத்மா சம்பந்தமாகவும் வேள்விகளுண்டு. சொல், மனம், செயல் இம்மூன்றிலும் தூய்மையோடி-ருப்பதைத் தான் நற்செய்கை என்கிறோம். பிறர் என்று கூறியபோது மனித வர்க்கத்தை மட்டும் குறிப்பிடவில்லை. உயிருள்ள எல்லாவற்றையுமே அது குறிக்கின்றது. ஆகவே அகிம்சா நெறிவழி பார்த்தால் மனித வர்க்கத்தின் சேவைக்காக மிருகங்களைப் பலி கொடுப்பதும் கூடாது' என்று ஏற்படுகிறதல்லவா? வேதத்தில் மிருக பலியைப்-பற்றிச் சொல்லப்பட்டிருப்பதாகக் கூறினாலும் நாம் அதை இலட்சியம் செய்யலாகாது. ஏனெனில் சத்தியத்திற்கும், அஹிம்சா தர்மத்திற்கும் மிருகபலி என்பது அடியோடு ஒவ்வாதது. எனக்கு வேறு புத்தகங்களில் பரிச்சயமில்லை என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இதற்காக நான் வருந்தவில்லை. வேதமார்க்கத்தில் மிருகபலி என்பதை ஆதரிப்பார்களாயினும் அகிம்சாதர்மி அதை ஒப்புக் கொள்ளவே மாட்டார். 'பலி, தியாகம் என்பதற்கும் அர்த்தமென்ன? பூமியில் பலவிடங்களில் உள்ளவர்களுக்கு நன்மை தருவதும், பல பேராலும் சுலபமாகக் கடைப்பிடிக்கக் கூடியதும்தான் உண்மையான கர்மமாகும். பெரிய காரியத்தைச் சாதிக்கும் நோக்கத்தோடு செய்தாலும் ஒரு சிறிய ஜந்துவுக்காவது கஷ்டம் கொடுப்பதென்றால் அந்தக் கிரியை ஒருபோதும் வேள்வியாகமாட்டாது. மகா வேள்வியென்று சொல்வதற்கோ துளிகூட இடமில்லை. 'வேள்வி' என்ற பெயருக்குள் அகப்படாது செய்யப்படும் இந்த கிரியைகள் யாவும் தளைகளைப் போன்றவைகளே-யென்று பகவத்கீதையிலும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அனுபவமும் அப்படியே சொல்கின்றது.

ஆனால் இந்தக் கருத்துப்படி மனிதர் 'வேள்வி' இயற்றாவிட்டால் உலகமே நடக்கமாட்டாது. ஆகவே ஞானத்தைப் பற்றி இரண்டாவது அத்தியாயத்தில் விவரித்த பின்பு அதை அடையும் வழியை அடுத்த அத்தியாயத்தில் கூறும்போது 'வேள்வி' என்பது படைப்பு காலத்தினின்று ஏற்பட்டிருப்பதாக பகவத்கீதை சொல்லுகின்றது. இவ்வுடல் நமக்கு எதற்காக கொடுக்கப்பட்டிருக்கிறதென்பதை

ஆலோசித்தால் படைப்பிலுள்ள எல்லா உயிரினங்களுக்கும் பணி செய்வதற்காகவே என்பது தெரியவரும். கீதையிலும் இந்த விஷயம் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'வேள்வி' செய்யாமல் உண்பவர் சோற்றைத் திருடி உண்கிறார்'' என்று கீதை சொல்வதின் தாத்பர்யம் இதுதான். தூய வாழ்க்கை நடத்த விரும்பும் மனிதர் வேள்விகளைச் செய்ய வேண்டும். நமது பிறவியோடு 'வேள்வி' என்ற கடமையும் உடன் பிறந்திருக்கிறது; நமது வாழ்வு முழுவதும் நாம் கடன் பட்டிருக்கிறோம். ஆகவே உலகிற்கு முழுவதும் கடன்களைச் செலுத்தியே தீரவேண்டும். எஜமானரிடமிருந்து உணவு, உடை முதலியவைகளை அடிமையானவர் பெற்றுக்கொண்டு எவ்வாறு உழைத்து வருகின்றாரோ அவ்வாறே அண்டசராசரங்களுக்கும் தந்தையான ஆண்டவன் தரும் சன்மானங்களை நாமும் பெற்றுக் கொண்டு உழைத்து வரவேண்டும். நமக்குக் கிடைப்பனவெல்லாம் இனாமாக தரப்பட்டனவென்று நாம் கருதவேண்டும். பட்ட கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு மனங் கசங்கலாகாதன்றோ. நமக்கு ஏதும் கிடைக்காவிட்டால் அதற்காக நாம் நமது யஜமானனை குற்றங் கூறலாகாது. நமது உடலே அவருடையது. அவர் இதை விரும்பினாலும் சரி அல்லது வெறுப்படைந்து விட்டெறிந்தாலும் சரி நாம் ஏதும் சொல்வதற்கில்லை. அவரிடம் புகார் சொல்லவோ, கெஞ்சவோ எதற்கும் இடமுமில்லை. கடவுளின் ஆட்சிமுறையை நாம் அறிவோமானால் 'யாவும் நன்மைக்கே! யாவும் திருப்தி தருவனவே' என்று நாம் அறிந்து கொள்வோம். ஒவ்வொருவருக்கும் இவ்விஷயத்தில் தீவிர நம்பிக்கை ஏற்பட்டுவிட வேண்டும். அப்போது தான் ஆனந்தமேற்படும்.

'உன்னைப் பற்றி ஏன் கவலைப்படுகிறாய்? எல்லாக் கஷ்டங்களையும் கடவுள் தலையில் போட்டுக் கவலையற்றிரு' என்று உலகிலுள்ள ஒவ்வொரு மதமும் போதித்துக் கொண்டிருக்கிறது.

இதைக் கேட்டு யாரும் திடுக்கிட வேண்டாம். சுத்த மனத்தோடு தொண்டு செய்யும் மனிதர் நாளாக ஆக நம்பிக்கை என்ற பொக்கிஷத்தை அதிகமாக அடைந்தே

தீருவார். சுயநலம் உடையவர் சேவை என்ற பாதையில் துளிக்கூட போக முடியாது. தெரிந்தோ தெரியாமலோ நாம் ஒவ்வொருவரும் தொண்டு செய்துதான் வாழ்ந்து வருகிறோம். அதை அறிந்து கொண்டு செய்வோமானால் நமக்கு 'சேவையின் மீது இன்ப உணர்ச்சி ஏற்படும். உலகத்துக்கும் அதனால் அதிக நலமுண்டு.

## 15. "வேள்வி" அல்லது தொண்டு-2

சென்ற வாரத்தில் வேள்வியைப் பற்றி நான் எழுதியிருந்த போதிலும் இன்னும் கொஞ்சம் அதைப்பற்றி எழுத விரும்புகின்றேன். மனிதரோடு பிறந்ததெனக் கருதப்படும் அந்த மகா விஷயத்தைப் பற்றி எவ்வளவோ சொல்ல வேண்டுமன்றோ! வேள்வி என்பது மனித உடலெடுத்த ஒவ்வொருவரும் தினந்தோறும் செய்ய வேண்டிய கடமையாகும். 24 மணி நேரமும் இடைவிடாமல் செய்யும் சேவையை இது குறிக்கின்றது. பிறருக்கு ஏதோ பிரமாதமான தயவைக் காட்டுவதாக எண்ணிக்கொண்டு உபகாரம் செய்யத் தொடங்குவது தவறு. "பரோபகராய ஸதாம் விபூதாய. அதாவது நல்லவர்கள் தங்கள் கையில் கிடைக்கும் யாவற்றையும் பிறருக்கே கொடுக்கின்றனர் என்ற முதுமொழியை உணர வேண்டும். சுயநலமின்றித் தொண்டாற்றினால் பிறருக்கு தயவு காட்டுவதால் நமக்கு நாமே தயவு காட்டிக் கொண்டவர்களாவோம். நாம் பட்ட கடனைத் தீர்ப்பதால் நமது சுமையைக் குறைத்துக் கொள்வதோடு நமது கடமையையும் செய்தவராகின்றோம். அவ்வாறே பிறருக்குச் சேவை செய்தலையும் கடமையாகக் கொள்ள வேண்டும். நாமனைவரும் நம்மிடமுள்ள அனைத்தையும் மனித வர்க்கத்துக்காக அர்ப்பணம் செய்துவிட வேண்டும். தன்னுடையதென்று எண்ணி அநுபவிக்க மனித வாழ்வில் இடமே கிடையாது. தியாகம் செய்வதே மனிதரின் உத்தம இலட்சியம். துறவு பூணுவதில் மனிதர் கொள்ளும் மகிழ்ச்சியே அவரை மிருகத்தினின்றும் வேறுபடுத்துகின்றது.

இவ்வாறு இல்லற தர்மத்திலிருக்கும் ஒருவர் துறவியாய் விட்டால் அவரது வாழ்க்கை ஸ்தம்பித்து விடுவதாகவும் ரம்யமில்லாது போய்விடுமென்றும் சிலர் கூறக்கூடும். துறவு பூணுவதென்றால் என்ன? உலகத்தைத் துறந்து காட்டுக்கு

ஓடிப்போக வேண்டுமென்று அர்த்தமா? அல்லவே அல்ல. நமது வாழ்க்கையின் அலுவல்களில் எல்லாம் பற்றுதலின்றி குணம் மிகுந்திருக்க வேண்டும். இல்லறத்தை சிற்றின்பமெனக் கொள்ளாமல் அதையும் ஒரு கடமையென நினைத்து அலுவல்களைக் கவனிப்பவரும் ஆசிரம தர்மத்தை கடைப்பிடிப்பவரே. ஒரு வியாபாரியின் கையில் கோடிக் கணக்கான ரூபாய்கள் புரண்டு கொண்டு இருப்பதாக வைத்துக் கொள்வோம். ஆனால் அவரும் அதை ஒரு சேவையெனக் கருதுவாராகில் அவரும் தூயவரே! அவர் பிறரை ஏமாற்ற மாட்டார். சூதுவாதுகளில் ஈடுபடமாட்டார். எளிய வாழ்க்கை யையே நடத்துவார். எந்த ஜீவனுக்கும் துளி உபத்திரவம் செய்யவும் துணியார். கோடிக்கணக்கான ரூபாய்களை இழப்பதற்கும் துணிவாரேயன்றி, பிறருக்குத் தீங்கிழைக்க நினையார். இத்தகைய வியாபாரி உலகிலிருப்பது வெறும் கட்டுக் கதையென நினைத்து விடாதீர்கள்; உலகம் செய்த பாக்கியத்தின் பயனாக கீழ்நாட்டிலும், மேனாட்டிலும் இத்தகைய பெருந்தன்மை மிகுந்த வர்த்தகர்கள் இருக்கின்றனர். இவர்களின் தொகை குறைவாக இருந்தால் அதனால் என்ன? "வாத்வான்' என்ற ஊரில் இத்தகைய நற்குணமுடைய ஒரு தையற்காரரை நான் அறிவேன். ஒரு நாவிதரையும் நான் கண்டிருக்கிறேன். இத்தகைய நல்ல குணமுடைய கைக்கோளர்களை அநேகவிடங்களில் காணக்கூடும். உலகில் கூர்ந்து கவனித்தால் தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் அநேகப் பெரியார்களை ஒவ்வொரு இடத்திலும் நாம் காணலாகும். இந்த மகான்கள் தொழில் செய்து ஜீவனம் செய்து வருகின்றனராயினும், உயிர் வாழ்வது மட்டும் அவர்கள் இலட்சியமல்ல. மோதிலால், என்பவர் தையற்காரர்தான். ஆனால் அவரது ஆத்மா, சுத்தமடைந்து விடவே, அவர் செய்யும் தொழிலும் ஓர் பூஜையாக ஆகிவிட்டது. பிறருடைய நலத்தைப் பற்றி அவர் கவலை கொள்ளத் தொடங்கினார். வாழ்வு நடத்துவது அவருக்கு, கேவலம் ஒரு சித்திரமாகவே மாறிவிட்டது. தியாக வாழ்வு என்பது சித்திரங்களுக்கெல்லாம் சிறந்த சித்திரமல்லவா? தியாக வாழ்வு ஆனந்த மயமானதல்லவா? கடமையை ஒரு சுமையென்று நினைத்து விட்டால் புனிதமான எண்ணத்திற்கே இடமில்லை. போக வாழ்வு

கடைசியில் அழிவையே தரும். தியாக வாழ்வோ அமர நிலையை தரும். ஆனந்தமென்பது என்ன? அது அவரவர்களுக்குள்ள ருசியைப் பொறுத்திருக்கிறது. நாடகப்படுதாவில் எழுதப்பட்டுள்ள படங்களைப் பார்த்து ஒருவர் ஆனந்தமடையக் கூடும். இன்னொருவர் இயற்கை வெளியைக் கண்டு இன்பமெய்தக்கூடும். ஆகவே ஆனந்தமென்பது அவரவர் மனோபாவத்தையும், அவர்களின் கல்வியறிவையும் பொறுத்திருக்கிறது. பெரியோர் சொல்லிக் கொடுத்தபடி குழந்தைகள் விஷயங்களை ரஸிப்பது போலத்தான் நாமும் உலகில் ரஸிக்கின்றோம். நிற்க.

தியாகம் செய்பவர்களில் அநேகர் தங்களுக்கு வேண்டுவன அனைத்தையும் பிறரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாமென நினைக்கின்றனர். அப்பொருள்களால் தங்களுக்கு பயனில்லாது போனாலும் பரவாயில்லை. கேட்டு வாங்கிக் கொள்ளலாமென நினைக்கின்றனர். தாங்கள் ஏதோ சுயநலமின்றித் தியாகம் செய்வதாகவும் எண்ணிக் கொள்கின்றனர். இவ்வாறு ஒருவர் "தியாகம் செய்தாலும் அவர் பொதுஜன ஊழியராகமாட்டார். ஜனங்களுக்கு தீங்கிழைக்கும் கொடியரென்று கூட அவரைக் கருதலாம்.

உலக மக்களுக்காக உழைப்பவர் தனது சொந்த சௌகரியங்களைப் பற்றி லவலேசமும் சிந்திக்க மாட்டார். அவைகளைக் கவனிக்கும் பொறுப்பை ஆண்டவன்பால் விட்டுவிடுவார். உயிரும் உடலும் ஒட்டியிருப்பதற்கு எவ்வளவு தேவையோ அதற்கு வேண்டியதை மட்டுமே கவனிப்பார். அவர் சாந்தத்தோடிருப்பார்; கோபத்தை வென்றவராயிருப்பார்; அவரது உள்ளம் கலங்காது; அசௌகரியங்களேற்பட்டாலும் மனச்சலனமடையார்; அவரது உழைப்புத்தான் அவருக்கு கூலி!

உழைப்பதற்கு யாருமே தயங்கலாகாது. தனது சொந்த விஷயங்களில் மட்டும் மிக்க சிரத்தை காட்ட வேண்டுமென்றும் பொதுநல சேவையை எப்போது வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் செய்யலாமென்றும் நினைப்பவர் 'தியாகம்' என்ற படிப்பில் முதற் பாடத்தைக் கூட அறியாதவரென்றே அர்த்தம். சொந்த அலுவலைவிட பன்மடங்கு சிரத்தையோடு பொதுநல சேவை செய்ய

வேண்டும். ஆகவே உண்மையான தியாகி தனது எல்லாவற்றையும் துறந்து மனித வர்க்கத்துக்கு சேவை செய்வதிலேயே தன்னை அர்ப்பணித்து விடுகின்றார்.

## 16. ஸ்வதேசி தர்மம்

தற்காலம் நமது ஸ்வதர்மம் எது? அதுதான் ஸ்வதேசியம். இயற்கையின் விதிகளைப் போல ஆத்மார்த்த விதிகளுக்கு யாதொரு தூண்டுதலும் தேவையில்லை. அவை தானாகவே வளர்ந்து கொள்ளும். ஆயினும் அறியாமை-யினாலும், பிற காரணங்களாலும் மனிதர் ஸ்வதேசியத்தைப் புறக்கணிக்கிறார்; அல்லது அதனை மீறி நடக்கிறார். இத்தகைய சந்தர்ப்பங்களில் மனிதரைச் சீர்திருத்துவதற்-காகவே உறுதிமொழிகள் தேவையாகின்றன. இயற்கையாகவே புலால் உண்ணாதிருக்கும் ஒருவர் "நான் புலால் உண்ணாதிருப்பேன்'' என்று சத்தியம் செய்ய வேண்டுமா? அவருக்கு மிருக உணவைப் பார்க்கும் போதே அருவறுப்பு ஏற்படுமேயன்றி இச்சை ஏற்படாது. மனிதரது இயற்கையிலொன்றாகிய ஸ்வதேசிய தர்மம் இன்று மறைந்து கிடப்பதைப் பார்க்கின்றோம். ஆகையினால் தான் சுதேசிய சபதங்களை - உறுதி மொழிகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. உலகத்தின் இச்சைகளினின்றும் ஆத்மா விடுபட வேண்டுமென்பதே ஸ்வதேசிய தர்மத்தின் ஆத்மார்த்த நோக்கமாகும். முடிவான நோக்கமும் அதுவே. ஆத்மாவின் இருப்பிடம் மண்ணுலகந்தானா? இல்லை. இங்கு தான் ஆத்மா சாசுவதமாக இருக்குமா? அதுவுமில்லை. இந்த மண்ணுலகில் ஆத்மா இயற்கையாக வசிப்பதா? அதுவுமில்லை. ஆத்மாவின் உன்னதமான பிரயாணத்திற்கு மண்ணுலகம் ஓர் தடையாகும். 'உயிரெல்லாம் ஒன்றே என்ற உன்னத மார்க்கத்தையும் இந்த மண்ணுலகம் தடை செய்கின்றது. உலக படைப்பும் தானும் ஒன்று என்று மனிதர் அறியாத வண்ணம் பரு உடல் தடை செய்கின்றது. ஸ்வதேசி தர்மத்தை கடைப்பிடிப்பவர் அந்தத் தளையினின்று விடுபட்டவர்.

சுதேசிய தர்மத்தை கடைப்பிடிப்பவர் அருகிலிருப்பவரின் சேவைக்கு தன்னை அர்ப்பணம் செய்து கொள்வார். அதுதான் அவரது முதல் கடமை. அப்படியானால் தூரத்திலிருப்பவர்களின் நலத்தை புறக்கணிப்பதாக

அர்த்தமா? அவ்வாறு கொள்வதற்கில்லை. அருகாமை-யிலிருப்பவருக்கு உண்மை யாகச் செய்யும் தொண்டு தூரத்திலிருப்பவருக்கு ஒருபோதும் தீங்கு செய்யாது. அவர்களுக்கும் நன்மையே பயக்கும். "காணிக்கானது தான் கோடிக்கும்" என்பது பழமொழி.

ஆனால் தூரத்திலிருப்பனவற்றைக் கண்டு அங்கு தொண்டு செய்யும் பொருட்டு உலகமெல்லாம் பவனி ஓடினால் அவரது எண்ணங்கள் கைகூடாமல் கடமை தவறிவிடுவார். ஓர் உதாரணம் சொல்கிறேன், என்னை சுற்றிலும் பந்துக்களும், என்னையே நம்பியுள்ளவர்களும், வேறு சிலரும் இருக்கின்றனர். என் மீது அவர்களுக்கு உரிமையிருப்பதாக எண்ணி எனது போஷணையையும் உதவியையும் நாடுகின்றனர். அது சகஜம்தானே. இந்த நிலையில் திடீரென்று புறப்பட்டு எங்கேயோ இருக்கும் ஜனங்களுக்கு உதவி செய்யப் போகிறேன் என்று வைத்துக் கொள்வோம். அந்த சமயத்தில் எனது சுற்றம், உறவினர். என்னை நம்பினோர் எல்லோரையும் நான் அலங்கோலப்படுத்துவதுடன் நான் போன இடத்திலும் குழப்பத்தை உண்டு பண்ணவும் நேரும். ஸ்வதேசிய தர்மத்தை மீறுவதால் இருவகைப் பாவங்கள் நேரலாம். முதலாவது சுற்றத்தாரைப் புறக்கணித்த பாவம், இரண்டாவதாக நான் உதவி செய்யச் சென்ற இடத்தில் செய்யும் தீங்கு வேறு!

வேண்டுமானால் இத்தகைய உதாரணங்கள் பலவற்றைச் சொல்லலாம். பகவத் கீதை சொல்வதை நினைவுக்கு கொண்டு வருவோம். "ஆபத்துள்ள பரதர்மத்தில் நுழைந்து அவதிப்படுவதைவிட ஸ்வதர்மத்தைச் செய்து சாவதே மேலானது." ஸ்வதர்மத்தைப்பற்றிச் சொல்லப்பட்ட இந்த வாக்கியம் சுதேசி தர்மத்துக்கும் பொருந்தும். சுற்றிலும் உள்ளவர்க்குப் பணி செய்வதே ஸ்வதேசியாகும்.

இந்த ஸ்வதேசிக் கொள்கையை சரியாகத் தெரிந்து கொள்ளாததனால் தவறுகள் ஏற்படுகின்றன. நல்லதும் தீயதும் செய்தும் ஒருவர் தன் குடும்பத்திற்குப் பணம் சேர்க்கத் தொடங்கிவிடுகிறார். இது 'சுதேசி' தர்மமன்று. நியாயமான வழிகளில் குடும்பத்தில் வேண்டியதைச் செய்ய வேண்டுமென்று சுதேசி தர்மம் சொல்கின்றது. அதன் வழி

நடந்தால் உலக நடைமுறைகளை என்னால் அறிந்து கொள்ளக் கூடும். சுதேசியத்தினால் பிறருக்கு தீங்கு ஏற்படவே ஏற்படாது. அப்படியேற்படுமானால் நான் அனுஷ்டித்தது ஸ்வதர்மமல்ல வென்றும் சுயநலமென்றும் அறிய வேண்டும்.

சுதேசி தர்மத்தை அனுஷ்டிப்பவர் உலக நன்மைக்காகத் தன் குடும்பத்தைத் தியாகம் செய்ய நேர்ந்தாலும் நேரலாம். அப்படி மனப்பூர்வமாகச் செய்யும் தியாகம் தான் குடும்பத்திற்குச் செய்யும் தொண்டாக எண்ண வேண்டும். 'தன் உயிரை பெரிதெனக் கருதுபவர் உயிரை இழப்பார். இறைவனுக்காக உயிரைத் தருபவர் உயிரை பெறுவார்' என்று சொல்லப்பட்ட மொழிகள் தனி மனிதருக்கும் குடும்பத்திற்கும் பொருந்தும். இன்னொரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நானிருக்கும் கிராமத்தில் பிளேக் வந்துவிட்டதாக வைத்துக் கொள்வோம். அக்கொடிய நோய்வாய்ப்பட்டவர் களைக் காப்பாற்ற நான் செய்த முயற்சியில் என் மனைவி, குழந்தை முதலிய உறவினர்கள் எல்லோரும் மடிந்து போனதாக வைத்துக்கொள்வோம். அப்பொழுதுகூட நான் குடும்பத்திற்கு நன்மை செய்யா-தவனாவேனேயொழிய அதை அழித்தவனாகமாட்டேன். சுதேசிய தர்மத்தில் சுயநலத்திற்கிடமில்லை. அப்படி ஏதாவது சுயநலம் இருந்தாலும் அது உன்னதமான சுயநலமாகும். அந்த சுயநலத்திற்கும் பரோபகாரத்திற்கும் வித்தியாசமே கிடையாது. உலக ஊழியத்தின் சிகரமே உண்மையான ஸ்வதேசியம்!

ஆதலால் சுதேசிக் கொள்கையின் முக்கியமான அவசியமான பகுதியாகக் கதரை நான் கருதுகிறேன். "இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் தற்போது எவ்விதமான உதவியை வேண்டுகிறார்கள்? எந்த உதவியைப் பற்றிச் சொன்னால் அனைவருக்கும் விளங்கும். எந்த உதவியை மெச்சுவார்கள்? எந்த உதவியை எளிதில் செய்ய முடியும்? எந்த உதவியால் பட்டினி கிடக்கும் ஏழைகளுக்கு கஞ்சி கிடைக்கும்? என்று நான் யோசித்துப் பார்த்தேன். அந்த உதவிதான் "கதர், ராட்டை" என்று நான் கண்டு கொண்டேன்.

கதரின் மூலமாக சுதேசியத்தைப் பின்பற்றுவதால் அந்நியத்துணி ஆலைக்காரர்களுக்குத் தீங்கு ஏற்படும் என்று எண்ண வேண்டாம். ஒரு திருடரைக் கெட்ட வழியினின்று திருப்பினாலும், திருடியதைத் திருப்பித் தரச் செய்தாலும் அவருக்கு ஏதாவது நஷ்டம் செய்கின்றோமா? ஒன்று-மில்லை. அறிந்து ஒரு விதத்திலும் அறியாது இன்னொரு வகையிலும் அவருக்கு லாபமே உண்டாகின்றது. பங்கியடிப்-பவர்களும் குடிகாரர்களும் தங்கள் தீய வழக்கத்தினின்று நீங்கிவிட்டால் கள்ளுக்கடைக்காரருக்கும் அபினி கடைக்-காரருக்கும் நஷ்டம் ஏற்படுவதாகக் கூறலாமா? லாபம் என்ற பதத்தின் உண்மையான பொருளின்படி லாபமடைந்தவர்கள் அந்தக் கடைக்காரர்கள்தான். பாபத்தினால் ஊதியம் பெறுவது நின்றுபோனால் தனிமனிதருக்கோ சமூகத்திற்கோ ஒருக்காலும் நஷ்டம் உண்டாகாது. எல்லாம் லாபமேயாகும்.

ஏதோ கொஞ்சம் நூல் நூற்பது; கதரைக் கட்டிக் கொள்வது; இவ்வளவுதான் சுதேசி என்று எண்ணுவது தவறு. கதரைக் கட்டிக் கொள்வதால் சமூகத்திற்குச் செய்ய வேண்டிய முதல் சுதேசிக் கடமையை ஆற்றியவரா-கின்றோம். கதர் கட்டிய பலர் அனேக அன்னியநாட்டுப் பண்டங்களை உபயோகித்து "பழிக்குப் பழி தீர்த்துக் கொள்வதை அடிக்கடி பார்க்கின்றோம். அவர்கள் ஸ்வதேசிய தர்மத்தை கடைப்பிடிப்பவராவார்களா? ஒருக்காலும் ஆக மாட்டார்கள். ஸ்வதேசிய பக்தர் உள்ளூர் பண்டங்களையே வாங்குவார். வேற்று நாட்டு பண்டங்களை விட உள்நாட்டுச் சரக்கு மட்டமான-தாயினும், விலை அதிகமானதாயினும் அவர் பாராட்ட-மாட்டார். அவைகளிலுள்ள குற்றங்குறைகளை நீக்கவே அவர் முயற்சிப்பார். அவைகள் நன்றாயில்லையென்ற காரணத்திற்காக அந்நியச் சாமான்களை வாங்க மாட்டார்.

# காந்திய சிந்தனைத் தேர்வுக்குரிய நூல்கள்

## சான்றிதழ் தேர்வு

| | | |
|---|---|---|
| சத்திய சோதனை | - | மகாத்மா காந்தி |
| காந்திஜி | - | டாக்டர். மா.பாதமுத்து |
| காந்தி யுகம் | - | டாக்டர். மா.பா.குருசாமி |
| சர்வோதயம் | - | " " |
| அஹிம்சை | - | டாக்டர். அப்துல் ரஸாக் |
| காந்திக்கு முந்திய புரட்சிகள் | - | மகரிஷி. க.அருணாசலம் |

## டிப்ளமோ தேர்வு

| | | |
|---|---|---|
| காந்தி வழிச் சமயம் | - | தி.சேஷாத்திரி |
| பதினொரு மகாவிரதங்கள் | - | மகாத்மா காந்தி |
| சத்தியமே கடவுள் (ரகுபதி ராகவ) | - | மகாத்மா காந்தி |
| பெண்களுக்கு | - | மகாத்மா காந்தி |
| உலக அமைதிக்கு அகிம்சை வழி | - | மகாத்மா காந்தி |
| வகுப்பு ஒற்றுமை | - | மகாத்மா காந்தி |
| சமூகத்தில் பெண்கள் | - | மகாத்மா காந்தி |
| நிர்மாண திட்டம் | - | மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - | மகாத்மா காந்தி |
| ஜனநாயகம் உண்மையும் போலியும் | - | மகாத்மா காந்தி |
| இந்திய சுயராஜ்யம் | - | மகாத்மா காந்தி |
| காந்தி வழி வாழ்க்கை | - | டாக்டர்.ஜே.ஸி.குமரப்பா |
| உழைப்பு | - | " " |
| காந்தி வழி ஓர் அறிமுகம் | - | க.ரா.கந்தசாமி |
| கோட்பாடுகளில் காந்தியம் | - | டாக்டர்.முத்துலட்சுமி |
| | - | டாக்டர்.ஆண்டியப்பன் |
| காந்திய சிந்தனைகள் | - | டாக்டர்.மா.பா.குருசாமி |
| காந்தி வழி கல்வியும் சமூகமும் | - | டாக்டர்.மா.பாதமுத்து |

**1- 5369**


கிடைக்குமிடம் :-

**காந்திய இலக்கிய சங்கம்**

காந்தி மியூஸியம், மதுரை - 625 020.